கோடுபோட்ட மற்றும் கட்டம் போட்டசுபேன்னி ஷர்ட்டிங்,
வெண்ணிற மற்றும் சாயம் தோய்த்த பாப்லின்களும்,
டாபி பாப்லின்களும்,
வெண்ணிற மற்றும் சாயம் தோய்த்த
ப்ரிண்டெட் லான்கள், ப்ரிண்டெட்
வாயில்கள்,
கண்கவர் விதங்களில் 2x2
கியூம் வாயில்கள்,
புட்டாக்கள் மற்றும் புடவைகள்
லைப்ஃபைன் வேஷ்டிகள்
காபர்டின் கோட்டிங்.

அழகுத் தேவதையோ
என வியக்கத்தக்க

இந்த ஆரணங்கு அணிந்திருப்பது

# ராய்ப் பூர்

தரத்தில் சிறந்த துணிவகைகள்

ராய்ப்பூர் மில்ஸ், அகமதாபாத்







SANFORIZED

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: திரு. அஜித்பாய் ஜெயந்திலால் சோமாபாய படேல் & கோ., 5, கிடங்குத் தெரு, சென்னை. ஏகபோக ஏற்றுமதி ஏஜெண்டுகள்: திரு. லால்பாய் எக்ஸ்போர்ட்ஸ் லிமிடெட், கண்ட்ராக்டர் பில்டிங், நிக்கோல் ரோடு, பல்லார்ட் எஸ்டேட், பம்பாய்—1.





"என்னுடைய சொற்ப
சேமிப்பை வைத்துக்கொண்டு
என்ன செய்வதென்று யோசித்துக்
கொண்டிருந்தேன். பண முதலீடு விஷயத்தில்
அநுபவம் மிக்க நண்பர் ஒருவர் அதே நேரம்
உள்ளே வந்தார்."



"நீங்கள் யூனிட்டுகளை
வாங்கினுல் என்ன?." என்று
கேட்டார் அவர். "உங்களு
டைய சேமிப்புக்கு யூனிட்டுகள்
பாதுகாப்பு அளிக்கின்றன.
கணிசமான டிவிடெண்ட்
வருமானத்தையும் வழங்கு
கின்றன. யூனிட்டுகளை சுலப
மாகப் பணமாக்கவும் முடியும்.
மேலும், ரூ. 1000 வரை டிவி
டெண்ட் வருமானத்திற்கு
வரி கிடையாது.

# "நாம் வெகுசீக்கிரம் செய்யும் முடிவுகளே சில வேளைகளில் மிக நல்லதாக அமைவதுண்டு!"



"என் நண்பரின் யோசனையை
நான் உடனே ஏற்றுக்கொண்டேன்.
யூனிட்டுகளில் முதலீடு செய்தேன்.
அதுபற்றி இப்போது நான் மகிழ்ச்சி
அடைகிறேன். யூனிட்டுகள்
எனக்கு உண்மையாகவே நல்ல
வரும்படியைத் தந்துள்ளன."



## யூனிட்டுகள்

நம்பிக்கையுடன் முதலீடு செய்ய
வாய்ப்பளிக்கின்றன

## யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா

பம்பாய் • சென்னை • புது தில்லி • கல்கத்தா

davp 68/248

கீலக ஐப்பசி 25 :: நவம்பர் 10

# கல்கி

# பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே. சம்பவங்களும் கற்பனையே.

## காந்தி விழா!







## செக்' தரும் பாடம்





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 28 □ இதழ் 15



# தந்திரத்துக்கு இடமற்ற சுதந்திரக் கட்சி

சுதந்திரக் கட்சிக் கொள்கைகளைப் பரப்புவதற்குப் பொறுமை அவசியம். ஆனால் சுதந்திரக் கட்சியில் உள்ள ஒரு சிலர் பொறுமையாக இருப்பதற்குச் சிரமப்படுகிறார்கள். திரும்பத் திரும்ப மக்களுக்கு ஒரே விஷயத்தைச் சொல்வது அவர்களுக்கு அலுப்பாக இருக்கிறது. எனவே பளிச்சென்று ஏதாவதொன்றைப் பின்பற்ற விரும்புகிறார்கள். கவர்ச்சிகரமான தந்திரம் ஏதேனும் செய்யவேண்டும், தீவிரமான போராட்டம் எதிலேனும் ஈடுபடவேண்டும் என எண்ணுகிறார்கள். தமிழகத்தில் ஆட்சியில் உள்ள கட்சியுடன் நட்பாயிருப்பது பல சுதந்திரக் கட்சி அங்கத்தினர்களுக்கு உபத்திரவமாகத் தோன்றுகிறது. காங்கிரஸ் ஆட்சியிலிருந்தால் அதை எப்படி எதிர்ப்போமோ, அதுபோல் தமிழகத்தின் இன்றைய ஆளும் கட்சியை எதிர்க்கச் சுதந்திரம் வேண்டும் என இவர்கள் எண்ணுகிறார்கள்.

உண்மைகளை மக்களுக்குப் புரியவைப்பது சிரமம். எதையேனும் தாக்குவதால் மக்களைக் கவருவது சுலபம். எனவே சில சுதந்திரக் கட்சிக்காரர்கள் எதிர்ப்பை விரும்புகிறார்கள். இவர்களுக்குப் பொருளாதார உண்மை தெரியும். இப்போதுள்ள உத்தியோக வாய்ப்புக்கள் காரணமாகவும், அவற்றுக்குத் தரப்படும் சம்பளம் காரணமாகவும்தான் தொழிலாளர்கள் இன்று நல்ல நிலைமையில் உள்ளனர் என்பதை இவர்கள் அறிவார்கள். லாபத்துக்கு இடமில்லாத தொழில்களிலிருந்து முதலாளிகள் வெளியேறிவிடுவர் என்பதும், இதனால் நீண்ட கால அடிப்படையில் வேலையில்லாக் கஷ்டம் உண்டாகும் என்பதும் இவர்களுக்குத் தெரியும். ஆயினும் முதலீடு செய்பவர்களுக்கும் தொழிலாளிகளுக்கு மிடையேயுள்ள பொதுவான நலன்களைப் புரிய வைப்பது சிரமம் எனக் காண்கின்றனர். ஆனால் ஒரு சாராரைத் தாக்கிப் பேசினால் மக்களின் கவனத்தைச் சுலபமாகப் பெற முடிவதைக் காண்கிறார்கள். பொருளாதார உண்மைகளை விளக்குகிற கடினமான, ஆயாசமான பணியை விட, ஏதாவது ஒரு விதத்தில் வரி கொடா இயக்கம் போன்ற போராட்டத்தை நடத்துவது சிலாக்கியம் என்று இந்த அதிருப்தியுற்ற சுதந்திரக் கட்சிக்காரர்கள் கருதுகின்றனர்.

உண்மை யாதெனில், காங்கிரஸின் இன்றைய நாசகரமான கொள்கை காரணமாக அதனின்று விலகியவர்களே இந்த சுதந்திரக் கட்சிக்காரர்கள். அவர்களுக்கு போர்வீரர்களின் மனோபாவம் உள்ளது. எனவே போராட்டத்தை விரும்புகின்றனர். பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்த காங்கிரஸாரின் மனப்பான்மைதான் இவர்களுடையது. சமாதானத்திலும், ஒற்றுமையிலும், ஒத்துழைப்பிலும் இவர்களுக்குச் சுவாரஸ்யமாக ஏதும் தெரியவில்லை. ஆனால் இந்தியாவின் நல்வாழ்வில் நாம் கொள்ளும் நம்பிக்கை சமாதானத்தையும், ஒற்றுமையையும், ஒத்துழைப்பையும் சார்ந்தனவே. நாட்டு நலனில் அக்கறையில்லாதவர்கள், எளிதில் நம்பிவிடும் மக்களைத் தம் வசப்படுத்திக் கொண்டு, ஜனநாயக சமுதாயம் தருகிற அதிகாரத்தைப் பெறுவதிலேயே முனைந்திருப்பார்கள். இவர்கள் பூசல்களை மூட்டிவிடுவார்கள். இந்தப் பூசல்களை அகற்றி அமைதி, இசைவு, கூட்டுறவு இவற்றை ஏற்படுத்துவதிலேயே தேசத்தின் நலம் உள்ளது.

சமீபத்தில் நாட்டின் தென் பாகத்தில் நடந்த மாநாடுகள் பற்றி அறிந்து கலக்கம் கொண்டேன். அதன்மீதே இந்தக் கருத்துக்களை வெளியிடுகிறேன். பொறுமை இழந்த இந்தச் சகாக்களினால் சுதந்திரக் கட்சித் தலைவர்கள் தவறான வழி சென்றுவிடக் கூடாது என்று எச்சரிக்கிறேன். சுதந்திரக் கட்சி ஸ்தாபிக்கப்பட்டபோது வகுத்த நேரான பாதையையே அவர்கள் வழுவாமல் பின்பற்ற வேண்டும்.

இந்தியாவைக் காங்கிரஸிடமிருந்தும் கம்யூனிஸ்ட்களிடமிருந்தும் காப்பாற்ற

நாம் விரும்புகிறோம். இதை எவ்விதக் கவர்ச்சித் தந்திரங்களாலும் சாதிக்க முடியாது. தந்திர உபாயங்கள் தாற்காலிகக் கிளுகிளுப்பு உண்டாக்குவதற்கு மேலாக எதுவும் செய்யா. 'நமக்கு அதிகாரம் கிடைத்தால் தான் நாம் நல்லன செய்ய முடியும்; எனவே முதலில் நமக்கு அதிகாரம் கிடைக்க என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்ய வேண்டும்' என்ற கருத்திலிருந்து நாம் விடுபட வேண்டும். எதிர்க் கட்சியின் முன்னணியில் இருப்பதில் ஓர் அதிகார சக்தி உண்டு; அல்லது அதிகார சக்தி போன்ற ஏதோ ஒன்று உண்டு. இந்தச் சக்தியைப் பெற்றவர்கள் உடனே ஆசை வலையில் சிக்கிவிடுகிறார்கள். தங்களுக்குக் கிடைத்துள்ள சக்தி நீடிப்பதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதிலேயே நாட்டம் காட்டுகிறார்கள். சுதந்திரக் கட்சிக்கென்றே ஏற்பட்ட பணியைக்கூட மறந்து, தமது அதிகார நீடிப்பிலேயே ஆசை கொள்ளலாகாது.

உண்மையில், நாம் தேடிப் போகாமல், நம்மைத் தேடி வருகிற அதிகாரம்தான் நாட்டுக்கு நல்லதாகும். பற்றில்லாமல் கருமத்தைச் செய்ய வேண்டும் என்று கீதாசாரியன் சொன்னதில், 'கருமம்' என்பது வைதிகச் சடங்குகளை மட்டும் குறிப்பதல்ல. அரசியல் காரியம் உட்பட்ட சகல கருமங்களையும் பற்றின்மை என்ற கீதா சூத்திரம் தழுவுகிறது. அரசியல் உள்ளிட்ட எந்தக் காரியத்தில் ஈடுபடும்போதும் அதில் சுயப் பற்றின்மையை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

நாம் பணி செய்கையில் பின்பற்ற வேண்டிய மனப்பாங்கை விளக்கி, மனத்தில் பதியச்செய்ய முயன்றிருக்கிறேன். கீதையின் உபதேசத்தை அரசியலில் பொருத்துவதற்கில்லை என நினைப்பவர்கள் கீதையையும் அறிந்தவரில்லை; அரசியல் பணியின் இயல்பையும் அறிந்தவரில்லை. உலகின் சகல காரியங்களுக்கும்—பிறர் நலனுக்காகச் செய்கிற சகல காரியங்களுக்கும்—கீதோபதேசம் பொருந்தும். கருமத்தில் ஈடுபட்ட மக்கள் அனைவருக்கும் தரப்பட்ட அவ்வுபதேசம் நமக்கு வழி காட்டி, நமது இலட்சியத்துக்கு அழைத்துச் செல்லுமாக! வரிகொடா இயக்கம் முதலிய நேரடி நடவடிக்கைகள் குறித்த தந்திரத்துக்குச் சுதந்திரக் கட்சியில் இடமே கிடையாது. மத்திய சர்க்கார் பூரணமாக ருஷியாவின் உப கிரகமாகி, இங்கு முற்றிலும் அந்நியராட்சிக்குச் சமமான நிலை ஏற்பட்டாலொழிய சுதந்திரக் கட்சி நேரடி நடவடிக்கையில் இறங்குவதற்கில்லை.

(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.)

# ராஜாஜியின் கருத்துக்கள்

வட வியட்நாமில் குண்டு போடுவதை அமெரிக்கா நிறுத்திவிட்டது. ஆனால் இதனால் பாரிஸில் நடக்கும் வியட்நாம் பற்றிய பேச்சு வார்த்தை வெகுவாகச் சீர்படும் என்று நான் நம்பவில்லை. குண்டு வீச்சை நிறுத்துவதால், அடுத்த வாரம் நடக்கும் அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் மாறுபாடு ஏற்படும் என்றும் நான் எண்ணவில்லை. இதனால் நிக்ஸனுக்கு (குடியரசுக் கட்சி) எதிராக ஹுபர்ட் ஹம்ப்ரேயின் (ஜனநாயகக் கட்சி) வெற்றி வாய்ப்பு அதிகமாகாது. நிருவாகத்தில் மாறுதல் ஏற்பட வேண்டும் என்று அமெரிக்க மக்கள் கொண்டுள்ள விருப்பம் மாறாது.

❖❖❖

பழங் காலத்தில் வழிப்பறிக்காரர்கள், கொள்ளைக் கூட்டத்தினர் யாவரும் ஒரு தேவனுக்கோ, தேவிக்கோ வேண்டுதல் செலுத்திவிட்டே தங்கள் சாகஸத்தில் இறங்குவது வழக்கம். இன்று லாட்டரிச் சீட்டு வாங்கியவுடன், மக்கள் திருப்பதி வேங்கடேசுவரனிடம் அதிர்ஷ்டம் வேண்டிப் பிரார்த்திக்கின்றனர். அதிருஷ்டம் அடித்தால் பரிசில் ஒரு பகுதியைத் திருப்பதி உண்டியலுக்குச் செலுத்துவதாக நேர்ந்து கொள்ளுகிறார்கள்.

'அரசாங்கம் தானாகவே பரிசுத் தொகை தரவில்லை, பரிசு பெறாத லட்சக் கணக்கான மற்றவர்களின் பணத்தையே நாம் பெறுகிறோம்' என்பதை லாட்டரி சாகஸக்காரர்கள் உணர்ந்ததாகத் தெரியவில்லை. யாருடைய பணத்தைப் பெறுகிறோம் என்பதை மனத்தில் கொள்ளாமல் ஆண்டவனிடம் அதிருஷ்டம் வேண்டுகிறார்கள்.

ஏழை மக்களுக்கு வரி விதித்ததாகக் காட்டாமலே, அவர்களின் பணத்தைத் திரட்டும் விஷமயமான ஒரு திட்டம் பல விதங்களில் கவடு விட்டு வளர்கிறது. இவை யாவும் நெறி தவறியவை; உண்மை முன்னேற்றத்துக்கு ஊறு பயப்பவை.

இத்திட்டத்தை எப்படிச் சட்டப்படி செல்லத்தக்கதாக்கலாம் என்று மத்திய சர்க்கார் ஆராய்ந்து வருவதாகச் செய்திகள் கூறுகின்றன. படிக்கவே நோகிறது. தவறான கருத்தில் ஏற்கனவே செய்துவிட்டதை வேண்டுமாயின் சட்டப்படி செல்லத்தக்கதாக்கலாம். ஆனாலும் இனியும் இதையே நிரந்தரமாக்கி ராஜ்ய சர்க்கார் நிதி சேகரிக்க வழி உண்டாக்குவது மத்திய சர்க்கார் செய்யத்தகாத காரியம். இது சூதாட்ட உணர்வை ஊக்குவதன்றி வேறல்ல. இது காந்தி நூற்றாண்டைக் கொண்டாட ஓர் இழிவான வழி. பட்ஜெட் வழக்கத்திலிருந்து அகௌரவமான முறையில் விலகியதுமாகும்.

ராஜ்யங்கள் போடும் திட்டங்களுக்குள் படுமோசமாகிய லாட்டரிக்குச் சட்டப்படி அங்கீகாரம் பெற ராஜ்ய சர்க்கார்கள் எவ்வளவு ஆர்வமாயுள்ளன என்பதைப் பார்க்கும் போது, இத் தீமை பற்றி நான் எவ்வளவோ சொல்லியும் போதவில்லை என்றே அஞ்சுகிறேன். சோம்பேறித்தனம்தான் இந்தியாவின் நன்மைக்குப் பெரும் பாதகம் விளைவிப்பது. அதை ஊக்குவது லாட்டரித் திட்டம். பார்லிமெண்ட் அங்கத்தினர்களின் நல்லறிவு சமயத்துக்கேற்றபடி எழுச்சி பெற்று,

லாட்டரியை நிரந்தரமாகச் சட்ட பூர்வமாக்கும் சாஸனத் திருத்த யோசனையை அவர்கள் நிராகரிப்பார் என நம்புகிறேன்.

* * *

சென்னை நகர சபைத் தேர்தல் முடிவுகள் பற்றிப் பத்திரிகைகளில் வெளியாகும் விமரிசனங்களைப் படித்துப் பார்க்கிறேன். நடைமுறைக்குச் சம்பந்தப்படாமல் அரசியல் தத்துவ ரீதியில் தரப்படும் விளக்கங்களுக்கு முக்கியத்வம் தருவதற்கில்லை. வாக்குகள் எப்படிப் பெறப்படுகின்றன என்று நன்கு அறிந்தவர்கள் அரசியல் தத்துவ விளக்கங்களை முக்கியமாகக் கருதார்.

தேர்தல் முடிவுகள் பற்றிய அபிப்பிராயம் எதுவாயினும் ஒரு விஷயம் தெளிவாகத் தெரிகிறது. ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு வோட்டு என்கிற அமைப்பும், ஜனநாயகப்படி நிறுவப்பட்ட சபையால் நகர நிர்வாகம் செய்வதும் இன்றைய இந்திய நிலைக்குப் பொருந்தவில்லை. நகரத்தின் பொது அபிவிருத்திக்கான காரியத்தில் மேலும் அதிகார பூர்வமான சக்தியும், பொறுப்பும், திறனும் நகர சபைக்குத் தேவை. ஒவ்வோர் அங்கத்தினரும் தன் பேட்டையைப் பற்றி மட்டிலும் அக்கறை காட்டுவது விலாக்கியமான ஏற்பாடாகாது.

நகர நிர்வாகத்தில் ஜனநாயகத்தைப் பொருத்தியதன் நிகர விளைவு அதை லஞ்ச உற்பத்தி ஸ்தாபனமாக்கியதே எனத் தோன்றுகிறது. நல்ல மனிதர்கள் நகர சபை அங்கத்தினர்களானால் தமது நேர்மைக் குணத்தை மட்டுமின்றி ஒழுக்கத்தையும் இழக்கிற பேராபத்து இருப்பதாகக் காண்கிறது.

* * *

நான்கு ஆழ்ந்த கருத்துக்களை நிறை கர்ப்பமாகக் கொண்ட நான்கு வாக்கியங்கள்:

1. கடவுளர்கள் யாரை அழிக்க விரும்புகின்றனரோ, அவர்களை முதலில் அதிகாரத்தினால் வெறி கொள்ளச் செய்கின்றனர்.

2. ஆண்டவனின் அரைவை இயந்திரம் மெதுவாகவே அரைக்கிறது; ஆனால் பொடிப் பொடியாக அரைத்துவிடுகிறது.

3. வண்டு எந்த மலரைக் களவாடுகிறதோ, அதே மலரைச் சூல் கொள்ளச் செய்கிறது.

4. போதிய இருள் இருந்தால்தான் நட்சத்திரங்களைக் காண முடியும்.

பெரிய மனிதர்கள், சிறிய மனிதர்கள் யாவரும் இவற்றை நினைவில் வைத்திருக்க வேண்டும். ''நான் கற்ற பாடம்'' (What Have Learned) என்ற புத்தகத்துக்கு நார்மன் கஸின்ஸ் எழுதிய முகவுரையில் இவ்வாக்கியங்கள் உள்ளன.

* * *

'ஹிந்து'ப் பத்திரிகை மீண்டும் வெளிவருவதை மக்களின் எல்லாப் பிரிவினரும் வரவேற்பர். நம்பகமான தகவல்களை உடனுக்குடன் தந்து, பாரபட்சமில்லாமல் வழிகாட்டுவதாக 'ஹிந்து' உரிமை பாராட்டுவது நியாயம். கடந்த 72 தினங்களில் பொது மக்கள் மிகவும் மதிப்புள்ள ஒன்றைத் தாங்கள் இழந்ததாகக் கருதியது இதை முற்றிலும் நிரூபித்து விட்டது.

* * *

இரண்டாம் உலக யுத்தம் முடிந்தபோது சர்வதேச வட்டாரத்தில் இந்தியா மிக உயர்ந்த தார்மிக முக்கியத்வம் பெற்றிருந்தது. இன்று இந்தியா உள்ள நிலையை நினைத்து, அன்றைய தார்மிக ஸ்தானத்தையும் நினைவு கொண்டால், எவ்வளவு பரிதாபமான மாறுதல் ஏற்பட்டு விட்டது என்று தெரியும்.

காரணம் என்ன? இதை எவ்வித மனச் சார்புமின்றி நாம் சிந்தித்து முடிவு காண வேண்டும். அந்நிய நாட்டுத் தலைவர்களும், பிரதிநிதிகளும் உபசாரமாகக் கூறும் புகழ் மொழியால் நாம் ஏமாந்து போகலாகாது. நம் தார்மிக நிலையைப் பழையபடி அடைகிற பணிக்கு உண்மையாக முகம் கொடுக்க வேண்டும். நமக்குப் பிடித்தபடி மனோராஜ்யம் செய்யாமல் உள்ளது உள்ளபடி அலசிப் பார்த்து, பரிகாரங்கள் தேட வேண்டும். செய்ய வேண்டியவற்றைச் செய்யத் தவறுவதாலும், செய்யத் தகாதனவற்றைச் செய்வதாலுமே தனி மனிதர்கள் தங்கள் கீர்த்தியை இழக்கிறார்கள். தேசங்களின் விஷயமும் இதுவே.

# "கண்ணனை நான் ஆட்கொண்டேன்"

ரா. கணபதி

ஆண்டவன் அடியார்களை ஆட்கொள்ளும் சரிதங்கள் பல. ஆண்டவன் என்றாலே மக்களை ஆளாக்கிப் பணிகொண்டு அவர்களை ஆளுபவன் என்பதுதான் பொருள். அடியார் என்றாலும் அடிமை என்றாலும் பணியாள் என்றே அர்த்தம். இப்படியிருக்க ஆண்டவனை ஒருவர் ஆட்கொண்டார் என்றால் அதிசயம்தானே! ஆண்டவனைத் தமக்குப் பணியாளாகக் கொண்ட அந்த அதிசய பக்தரான பாரதியார்

**கண்ணனை நான் ஆட்கொண்டேன்**
**கண் கொண்டேன்**
**கண் கொண்டேன்**

எனப் பாடுகிறார்.

இவ்வாறே ஓர் அதிசய பக்தர் மகாராஷ்டிரத்தில் பைத்தானில் நானூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தார். அவர்தான் ஏகநாதர்.

ராமாயணத்தையும், பாகவதத்தையும் மகாராஷ்டிர மொழியில் பாடுமாறு தத்தாத்திரேயரே ஏகநாதரைப் பணித்தார். பரம பக்த சிகாமணியான ஏகநாதர் அவ்வாறே தாய் மொழியில் ராமாயணமும், பாகவதமும் இயற்றி, தாமே அவற்றைப் பொதுமக்களிடையில் பரப்பினார். வீட்டிலே இந்த இதிகாசங்களைப் பாராயணம் செய்வார்; வெளியிலே அவற்றைப் பிரவசனம் செய்வார்.

அவருடனேயே அநுதினமும் இருந்து பாராயணமும் பிரவசனமும் கேட்க விரும்பினான் பண்டரிநாதன்.

'எங்கிருந்தோ வந்தான்' என்று பாரதி பாடினாற்போல் ஏகநாதரிடம் சென்று அவர் முன் நின்றான் பண்டரிநாதன். தன்னை வேலைக்காரனாகப் பணி கொள்ளச் சொன்னான்.

ராஜஸ்தான சக்கரவர்த்தினி மீராபாய் 'எனைப் பணியாளாக்கிக் கொள்வாய்' (சாகர ராகோஜி) என்று வேண்டியது இந்தக் கண்ணனிடம்தான். கர்நாடக சங்கீத மூலகர்த்தரான புரந்தர தாஸரும் அதே வேண்டுகோளை ''தாஸனை மாடிகோ'' என்று பாடியது இந்தக் கண்ணனிடம்தான். எளிமையின் தெளிவான அவனே ஏகநாதரிடம் வேலைக்காரனாவதற்கு வேண்டுகோள் விடுத்தான்.

அவனை உற்று நோக்கினார் ஏகநாதர். கட்டுறுதி யுள்ள உடல்; கண்ணிலே நல்ல குணம். உழைத்து உழைத்து உடம்பில் லயம் உண்டானது போல் உள்ளத்திலும் லயம் உண்டான ஜீவன் என்று பூரித்தார்.

''உன் பெயர் என்ன அப்பா?'' என்றார்.

''கண்டியா கிருஷ்ணன்'' என்றான்.

'கண்டியா கிருஷ்ணனோ, தாம் கண்டு கொண்ட கிருஷ்ணனோ' என மயங்கினார்.

''அப்பனே! எனக்கு ஊழியம் செய்துதான் பழக்கம். ஊழியம் வாங்கிக் கொள்ளத் தெரியாது. உன்னைப் போ என்று சொல்ல மனமில்லை. ஆனால் உனக்கு என்ன வேலை தருவது என்றும் புரியவில்லை... மேலும், எனக்குப் பணம் வைத்துக் கொண்டு பழக்கமில்லை. உனக்குச் சம்பளம் தர இந்த ஏழையால் எப்படி முடியும்?'' என்றார்.

''ஐயனே! தங்களைத் தேடிப் பல பாகவதர்கள் வருகிறார்கள். அவர்களுக்குக் கைங்கரியம் புரிய ஆசைப்பட்டே வந்தேன். எனக்குச் சம்பளம் ஏதும் வேண்டாம். பூஜை முடிந்து துளசித் தீர்த்தம் தருவீர்களே, அதை நெஞ்சக் குழி மணக்க உட்கொள்வேன். அதுவே மகத்தான சம்பளம்'' என்றான் கண்டியா கிருஷ்ணன்.

அவனது வாக்கிலே துளசி மணந்தது.

ஏகநாதர் அவனைப் பணி கொண்டார்.

அன்று ஏகநாதரின் தந்தையான சூரிய நாராயணருக்குச் சிராத்தம்.

கண்டியா கிருஷ்ணன் உழைப்பே உருவாக வீட்டைக் கண்ணாடி போல் மெழுகினான். நீர் சேந்தி நிரப்பினான். காய் கறிகள் நறுக்கினான். பிறகு பஞ்சபட்சிய பரமான்னங்களைச் சமைக்கலானான்.

மதுரமிக்க மாதவன் சமைத்தால் அந்த வியஞ்சனங்கள் எப்படித்தான் மணக்காது? வீடு முழுவதும் அவனது அன்பே போல் சமையல் கமகமத்தது.

வீட்டுக்கு வெளியிலும் வாசனை பரவியது. வீட்டுக்குப் பின்புறம் ஒரு ஹரிஜனக் குடும்பம் வசித்து வந்தது. அந்தக் குடிசையிலும் மணம் பரவியது. கண்ணன் லீலையில் காற்று செய்த மாயம் அது!

''இப்படி ஒரு வாசனை வீசுகிறதென்றால் இந்தச் சாப்பாடு வாய்க்கு எப்படித்தான் இருக்குமோ? நாம் கனவில்கூட அதை உண்டு பார்க்க முடியுமா?'' என்றாள் ஹரிஜனப் பெண் தன் கணவனிடம்.

கண்ணன் லீலையில் காற்று மீண்டும் மாயம் செய்தது. அந்தச் சொற்களைத் தூக்கி வந்து ஏகநாதர் செவியில் விட்டது!

''கண்டியா கிருஷ்ணா!'' என்று கூப்பிட்டார் ஏகநாதர்.

''வந்தேன்'' என்று வந்து நின்றான் கண்டியா கிருஷ்ணன். தூக்கிச் செருகிய வேஷ்டி. கையில் பிடித் துண்டு. நெற்றியில் எல்லாம் முத்து முத்தாக வேர்வை.

அவனழகையே பார்த்துக் கொண்டிருந்த ஏகநாதர், ''உனக்குச் சிரமம் கொடுக்கிறேன். கோபித்துக் கொள்ளாதே. சமைத்திருப்பதை யெல்லாம் தோட்டத்துப் பக்கம் இருக்கிற பஞ்சமர்களுக்குப் படைத்துவிடு. புண்ணியாகவாசனம் செய்து பித்ருக்களுக்கு மறுபடியும் சமைத்துவிடலாம். நீதான் நொடியில் செய்துவிடுவாயே'' என்றார்.

ஏகநாதர் ஜயித்துவிட்டார் என்பதில் அவன் மகிழ்ந்தான். அவர் உள்ளத்தால் ஜயித்து விட்டார். அதேபோதில் சாஸ்திரத்திலும் ஜயித்து விட்டார். அவர் மனம் பெரிதானது. ஆனாலும் சாஸ்திரக் கட்டுப்பாட்டை மீறி அது இயங்க அவர் விடவில்லை. ஆனால் இப்போது உணவைப் பக்குவம் செய்ததுபோல் அவர்மனத்தையும் பக்குவம் செய்து விட்டோம் என்று மகிழ்ந்தான் கண்டியா.

மோஹினி உருக்கொண்டு தேவர்களுக்கு அமுதம் படைத்த ஆராவமுதன், மோஹன

கண்டியாவாகிப் பஞ்சமருக்குப் பஞ்சபட்சிய பரமான்னங்களைப் பரிமாறினன்! வயிறும் இதயமும் புடைக்க அந்த எளிய மக்கள் உண்பதைக் கண்டு நெஞ்சம் நிறைந்தான்.

மீண்டும் சிராத்தச் சமையலைத் தொடங்கினன். ஆனல் நிமந்திரணப் பிராமணர்கள் அதை ஒப்புக்கொள்ளவில்லை. 'பித்ரு காரியம் ஆகும் முன் மற்றவர்களுக்கு—அவர்கள் யாராயிருந்தாலும் சரி — உணவிட்டது தவறு' என்று அடித்துக் கூறிவிட்டு, சிராத்தம் செய்து வைக்காமலே வெளியேறினர்.

கலங்கி நின்ருர் ஏகநாதர்.

ஸ்படிகமாகச் சிரித்தான் கண்டியா.

''ஏன் ஐயனே கலக்கம்? உங்களுக்கே தான் மந்திரம் தெரியுமே! அவற்றைச் சொல்லித் திதி கொடுங்கள்'' என்ருன்.

''மந்திரம் தெரியும் என்பது வாஸ்தவம். ஆனல் மஹாவிஷ்ணு இலையிலும், விச்வே தேவர் இலையிலும், பித்ருக்களுக்கான இலையிலும் அமர்ந்து புசிக்க அந்தணர் இல்லையே'' என்ருர் ஏகநாதர் விசனத்துடன்.

''அதைப்பற்றி ஏன் கவலை? மகாவிஷ்ணு இலையில் அமர மகாவிஷ்ணுவே வருவார். விச்வே தேவர் இலையில் அமர விசுவநாதனே வருவார். பித்ருக்கள் இலையில் அமர உமது பிதாவே வருவார்'' என்ருன் கண்டியா.

அவன் குரலில் தொனித்த உறுதியைக் கண்டு அயர்ந்துவிட்டார் ஏகநாதர்.

அவ்விதமே நடக்கும் என்று திடமுடன் சிரார்த்த காரியம் தொடங்கினர்.

அப்படியே நடந்தது.



கண்டியா கிருஷ்ணன் பக்குவம் செய்த உணவை உட்கொள்ள மஹாவிஷ்ணு வந்தான், விசுவநாதன் வந்தான், ஏகநாதரின் தந்தை சூரியநாராயணரும் வந்தார்.

இதெல்லாம் ஏகநாதருக்குக் கண்டியாவின் மகிமையாகத் தோன்றவில்லை.

வேதமந்திரங்கள் அவர்களைக் கட்டி இழுத்து வந்ததாகவே எண்ணினார்.

இருப்பினும் ஏகநாதரின் மனம் பூர்த்தியாகவில்லை. தமது கிருகத்தில் போஜனம் செய்ய வந்த வேதியர்கள் அன்னம் கொள்ளாமல் வெளியேற நேர்ந்தது அவர் உள்ளத்தை உறுத்தியது.

அவர்களை மீண்டும் வரவழைத்தார்.

''நான் கங்கா ஸ்நானம் செய்து தோஷத்தைத் துடைத்துக் கொள்ள விரும்புகிறேன். சங்கல்பம் செய்து வையுங்கள்'' என்றார்.

சங்கல்பச் சடங்கு தொடங்கும் சமயத்தில் ஒரு கிழ வேதியர் அங்கு வந்து சேர்ந்தார். பார்க்க அருவருக்கும் தொழுநோய்க்காரர் அவர்.

''நான் பரந்தாமனின் பக்தன். தொழுநோய் தீர நீண்ட நாளாக அவனைத் தொழுது வந்தேன். கடைசியில் அவனும் கருணை கொண்டு கனவில் தோன்றினான். 'பைத்தானவில் ஏகநாதர் சிராத்த தினத்தன்று பஞ்சமருக்கு உணவு ஈந்தார். அந்த அன்ன தான பலனுக்கு ஈடுமில்லை; இணையுமில்லை. அதை உமக்குத் தருமாறு அவரைக் கேளுங்கள். அப்பலனை அவர் உமக்குத் தந்தால் உமது நோய் உடனே தீரும்' என்றான். அதனால் தான் ஓடி வந்தேன். அன்னதான பலனைத் தருவீர்களா?'' என்றார் கிழவர்.

''என்னைப் பரந்தாமன் புரிந்து கொள்ளவில்லையே'' என்று விம்மினார் ஏகநாதர். ''அன்னதானத்துக்குப் பலன் உண்டு என்பதை நினைத்தா நான் ஏழையருக்கு உணவிட்டேன்? அந்தப் பலனை எனக்கென்றுதான் எடுத்துக் கொள்வேனா? 'அந்தப் பலனை நான் தந்தால்' என்று இறைவன் ஏன் சந்தேகமாகப் பேச வேண்டும்?'' என்றார்.

பலனைத் தத்தம் செய்ததற்கு அறிகுறியாக, கங்கா யாத்திரைச் சங்கல்பத்துக்காக வைத்திருந்த நீரை தொழுநோய்க்காரரின் கையில் வார்த்தார்.

அந்த நீரில் கங்கையில் காணிக்கை செலுத்தப்படும் வளையலும் பிச்சோலையும் காணப்பட்டன!

திருவிசை நல்லூர் ஸ்ரீதர அய்யாவாளின் வீட்டுக் கிணற்றில் இதே போன்ற ஒரு சந்தர்ப்பத்தில் கங்காப் பிரவாகம் வந்ததைத் தமிழகம் அறியும்.

தமிழகமாவது, மகாராஷ்டிரமாவது! மனம் எங்கு தெளிந்தாலும் அங்கு நிச்சயம் கங்கை பிறந்து விடுவாள்!

கிழப் பிராமணரின் தொழு நோய் மறைந்தது. பைத்தான பிராமணர்களின் 'அதி'யான போக்கும் மறைந்தது.

இப்படிப் பன்னிரண்டாண்டுகள் பணியாளாக இருந்தான் பரமன். பண்டரிபுரத்தில் ருக்மிணிக்கு அதற்கு மேல் தாங்கவில்லை. பக்தர் ஒருவரிடம் சொல்லிப் பரமனைப் பண்டரிபுரத்துக்கு இழுத்துவரச் சொன்னாள்.

ஏகநாதரின் இல்லம் அடைந்தார் பக்தர். அப்போது கண்டியா ஆற்றுக்குச் சென்றிருந்தான். ஏகநாதரே பக்தரை வரவேற்றார்.

''இங்கே கண்டியா கிருஷ்ணன் வேலைக்காரனாக இருக்கிறானா?'' என்றார் பக்தர்.

''ஆம், தங்களுக்கு அவன் என்ன ஆக வேண்டும்?'' என வினவினார் ஏகநாதர்.

''அவன்தான் எனக்குச் சகலமும்'' என்று உள்ளமுருகிக் கூறினார் அடியார்.

' 'நானேன் தனியான்' என்று சொன்னவனையிற்றே கண்டியா! அவன் மனிதர் என்று இதுவரை யாரும் தேடி வந்ததில்லையே' என்று யோசித்தார் ஏகநாதர்.

அவர் மனத்தில் புரிந்தும் புரியாமலும் ஏதோ இதழ்கள் விரியத் தொடங்கின. அரும்பு முற்றிலும் மலராக மலர்ந்து விடாமல், மெல்ல மெல்ல வாய் திறந்து பேசத் தொடங்கும் அழகு நிலை அது.

அச்சமயத்தில் ஆற்றிலிருந்து திரும்பினான் கண்டியா. ஸ்நானம் செய்து பரமசுத்தமாக வந்தான். தோளில் காவடி. இரண்டுபுறமும் நீர் நிரம்பிய இரு குடங்கள். வேலை அவசரத்துடன் விடுவிடுவென்று வீட்டினுள் புகுந்தான். பூஜையறைக்குள் பிரவேசித்தான்.

''கண்டியா, கண்டியா'' என்று கதறிக் கொண்டே அவனைப் பின்தொடர்ந்தார் பண்டரிபுரப் பிராமணர்.

ஏகநாதரின் சிந்தனை மலர் முற்றும் விரிந்தது.

கதறும் நிலைக்கும் அப்பாற்பட்ட அந்த அநுபவத்துடன் பூஜை அறைக்குள் ஓடினார்.

கண்டியாவைக் காணவில்லை.

'காண வில்லையா?

'அவன் காணாது போக முடியுமா?

'காண்பதெல்லாம் அவன்தானே?

' 'நானேன் தனியான்' என்றான். அவன் தான் எல்லாமும். நானும் அவன்தான். தனி — ஆளாகிய அவனே ஏக—நாதன். நானும் அவனே.'

ஏகநாதர் ஏகநாதராகவே ஆனார்.

ஏகநாதர் கங்கா யாத்திரைக்குப்போகாத அழகிய கதையை மேலே பார்த்தோம். அவர் கோதாவரி யாத்திரைக்குப் போன அழகிய கதையும் ஒன்றுண்டு.

ஸ்ரீ ராமன் ரமித்த கோதாவரியிலிருந்து பூஜைக்காக நீர் எடுத்து வந்தார் ஏகநாதர். பொடி ஓட்டிக் கொள்ளும் வெயில். நடப்பதே சிரமமாயிருந்தது. வருகிற வழியில் ஒரு கழுதை. தாகத்தில் தவித்தபடி, வெயில் தாங்காமல் வீதியில் புரண்டுகொண்டிருந்தது.

ஏகநாதரின் இதயத்தில் ஈரம் சுரந்தது. நெடுந் தொலைவு கோதாவரியிலிருந்து தாம் எடுத்து வந்த நீரை அப்படியே அந்த கர்த்தபத்துக்கு ஈந்தார். மக்களால் தாழ்த்தப்பட்ட தீண்டாதாருக்கு அன்று விருந்து படைத்தார். இன்று விலங்கினங்களில் இழிவாகக் கருதப்படும் கழுதையின் தாகம் தீர்த்தார்! பிறர் துயரத்தில் உதவுபவனே வைணவன் என்ற வார்த்தையை மெய்ப்பித்தவர் ஏகநாதர். 'பர துக்கே உபகார கரே' என்று 'வைஷ்ணவ ஜனதோ' பாடலில் வரும் வாக்கியத்துக்கு உருவமாகக் கனு தேசாய் தீட்டியுள்ள ஏகநாதர் ஓவியத்தையே இக் கதையில் காண்கிறோம்.

# ஆறு நெருக்கடிகளும் அயராத நெஞ்சமும்

(சென்ற வாரத் தொடர்ச்சி)



வன்மையான வாதத்திறனுடன் சொற்பெருக்காற்றுகிறார் நிக்ஸன்

**வெ**னுஸுலா நாட்டின் அயல்நாட்டு மந்திரிக்குக் கண்ணில் அடிபட்டதையும் கூட்டத்தினரின் ஆர்ப்பாட்டம் விநாடிக்கு விநாடி அதிகமாவதையும் கண்ட நிக்ஸனுடைய மெய்க்காப்பாளர் கோபத்துடன் துப்பாக்கியை உருவினார். அவர் எண்ணத்தைப் புரிந்து கொண்ட நிக்ஸன் உடனடியாக அவரைத் தடுத்து நிறுத்தினார். அன்று துப்பாக்கி வெடிக்கும் சத்தம் கேட்டிருந்தால் அடுத்த கணம் என்ன நேர்ந்திருக்கும் என்று யாரால் சொல்ல முடியும்? அந்த ஒரு பொறியைக் காட்டுத் தீயாக மாற்றக் கம்யூனிஸ்டுத் தலைவர்களுக்குத் தெரியாதா ?

கடைசியில் டிரைவருடைய சாமர்த்தியம் காரணமாக எப்படியோ அந்தக் கூட்டத்திலிருந்து விடுபட்டு நிக்ஸன் அமெரிக்கத் தூதராலயத்துக்குப் போய்ச் சேர்ந்தார்.

அடுத்த நாள் காலை நிக்ஸனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிற முறையில் ஏராளமான விளம்பரங்கள் தினசரிகளில் இடம் பெற்றன. அநாகரிகமாக நடந்து கொண்ட ஒருசிலரின் சார்பாக வேறு பல கனவான்களும் நிறுவனத்தினரும் மன்னிப்புக் கேட்டுக் கொண்டனர்.

இப்படி வெனுஸுலாவிலும் தமது தளராத உறுதி காரணமாய் ஒரு நெருக்கடியைச் சமாளித்தார்.

* * *

**க்**ருஷேவ் பதவியிலிருந்த காலத்தில் தினசரிகளை விடாமல் படித்து வந்தவர்களுக்கும், அவர் இந்தியாவுக்கு விஜயம் செய்தபோது நேரில் பார்த்தவர்களுக்கும் அவரது பேச்சும் தோற்றமும் நடையுடை பாவனைகளும் எவ்வளவு கவர்ச்சிகரமானவை என்பது தெரிந்திருக்கும். கம்யூனிஸக் கொள்கைகளை விட்டுக் கொடுக்காமல் அழுத்தம் திருத்தமாய்ப் பேசக்கூடிய அவர், அதே சமயத்தில் எல்லா நாடுகளுடனும் சிநேக பாவத்தை வளர்த்துக் கொள்ள விரும்பினார். வேறு எந்த ருஷ்யத் தலைவரும் செய்யத் துணியாத பல காரியங்களை அவர் செய்தார். பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் அவர் போனார். பிரிட்டிஷ், அமெரிக்கத் தலைவர்களைத் தமது நாட்டுக்கு வரவழைத்தார். பனிப் போரின் உக்கிரம் தணிய குருஷேவ் நன்முயற்சிகளை மேற்கொள்ள முன்வந்தார். அமெரிக்கப் பொருட்காட்சி சாலை ஒன்று ருஷ்யாவில் நடக்க அனுமதித்ததுடன், அதைத் திறந்து வைக்க அமெரிக்க உப ஜனாதிபதி நிக்ஸனையே அழைத்தார்.

உப ஜனாதிபதி பதவிக்குக் குடியரசுக் கட்சியின் அபேட்சகர் ஆக்நு.



ருஷ்யாவில் நிக்ஸன் குருஷேவைப் பல முறைகள் சந்தித்துப் பேசியும் இவற்றில் ஒரு சந்திப்பும் விவாதமும் ''சமையலறை விவாதம்'' என்ற தலைப்பில் உலகப் பிரசித்தி பெற்றன.

அமெரிக்கப் பொருட்காட்சி சாலையில் ஒரு சராசரி அமெரிக்க வீடு எப்படி இருக்கும் என்று ருஷ்ய மக்களுக்கு உணர்த்துவதற்காக ஒரு வீட்டைக் கட்டியிருந்தனர். இதைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வருகையில் நிக்ஸனுக்கும் குருஷேவுக்கும் இடையில் சமையலறையில் விவாதம் வலுத்ததால் இது ''சமையலறை விவாதம்'' என்று பிரசித்தி பெற்றது.

இந்த விவாதத்தை அமெரிக்க மக்கள் தங்கள் இல்லங்களில் டெலிவிஷனில் கண்டார்கள். சர்வாதிகாரி குருஷேவ் எதற்கும், யாருக்கும் அஞ்சாமல் அடித்துப் பேசினார். ஐக்கிய நாடுகள் சபையிலேயே தமது காலணியைக் கழற்றி அதைக் கொண்டு மேஜையை அறைந்தவராயிற்றே குருஷேவ்! ஆனால் நிக்ஸன் தாம் ஒரு விருந்தினர் என்பதை மறக்க முடியவில்லை. கனவானாகக் காட்சி தராமல் முரட்டுத்தனமாக நடந்துகொண்டால் அதைத் தமது எஜமானர்களான அமெரிக்க மக்கள் விரும்ப மாட்டார்கள் என்பதை நிக்ஸன் சதா நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியிருந்தது. ஆனால் குருஷேவோ நிக்ஸனைப் பேசவே விடாமல் சரமாரியாகப் பொழிந்து தள்ளினார். இடையிடையே சில நாகரிகம் வார்த்தைகளைக்கூடப் பயன்படுத்தத் தயங்கவில்லை அவர். இதைச் சமாளித்துக் கண்ணியத்தை இழக்காமல், அதே சமயத்தில் பலவீனமாகக் காட்டிக் கொள்ளாமல் அவருக்கு ஈடு கொடுத்து, முடிந்தால் வெற்றியும் காணவேண்டிய நெருக்கடி நிலையில் இருந்தார் நிக்ஸன். இதைக் குத்துச் சண்டையில் கைகளைப் பின்னால் கட்டிக் கொண்டு எதிராளியுடன் போராடுகிற நிலைமைக்கு ஒப்பிடுகிறார் அவர். எனினும் முதல் ரவுண்டில் தோற்றவன் இரண்டாவது ரவுண்டில் எதிரியை வீழ்த்துவது போல நிக்ஸன் ஆரம்பத்தில் தடுமாறினாலும் பின்னால் சமாளித்தார்.

கடைசியில் குருஷேவ், ''இப்போது அமெரிக்காவுக்குப் பின்னால் ருஷ்யா இருக்கலாம்; ஆனால் வெகு சீக்கிரமே உங்களை முந்திக் கொண்டு விடுவோம்! உங்களுக்கு 'டாட்டா' சொல்லிவிட்டு நாங்கள் வெகு தூரம் முன்னேறி விடுவோம்'' என்றார்.

''போட்டா போட்டிதான் அமெரிக்கப் பொருளாதார வெற்றிக்கு அடிப்படை. அந்த விதத்தில் பொருளாதாரத் துறையில் கம்யூனிஸத்துடன் ஜனநாயகம் நடத்தக் கூடிய இந்தப் போட்டா போட்டியைக் கூட நான் வரவேற்கிறேன்'' என்றார் நிக்ஸன்.

விவாதங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்க நினைத்த அருகிலிருந்த அரசாங்க உயர் உத்யோகஸ்தர்கள் சிலர், மதுவை இருவருக்கும் வழங்கினர். ''இதைக் குருஷேவின் நலனுக்கு அருந்துவோம்; அவர் நூறு ஆண்டுகள் வாழட்டும்'' என்றார் ஒருவர்.

''மிக்க மகிழ்ச்சியோடு இந்த எண்ணத்தை நான் வரவேற்கிறேன். குருஷேவின் கொள்கைகளை நாங்கள் ஏற்காமல் போகலாம்; ஆனால் குருஷேவ் நீடூழி வாழ வேண்டும்'' என்றார் நிக்ஸன்.

''ஆமாம், எனக்குத் தொண்ணூற்று ஒன்பது வயதான பிறகு மீண்டும் இந்தப் பிரச்னைகளை விவாதிப்போம்! இப்போதே என்ன அவசரம்?'' என்றார் குருஷேவ்.

''சுதந்தரமான தேர்தல்கள் ஏதுமில்லாத காரணத்தால் நீங்கள் தொண்ணூற்று ஒன்பதாவது வயதிலும் அதிகாரத்திலிருப்பீர்கள் என்றுதானே சொல்கிறீர்கள்?'' என்றார் நிக்ஸன்.

விவாதத்தின் உச்ச கட்டத்தில் தம்மையும் மீறி நிக்ஸனுக்கு ஒரு பாராட்டு

நிக்ஸன் குடும்பம்



# வாழ்க்கைப் படகு

இவ்விதழ் அட்டையில் ஓர் இனிய சிறிய குடும்பம் படகில் உல்லாசமாகச் சுற்றித் திரிவதைக் காண்பீர்கள்.

காஷ்மீரத்து தால் ஏரியோ, அல்லது கோடைக்கானல் சூழ்நிலையோ, அல்லது உதகமண்டல வனப்போ என்றெல்லாம் எண்ணிக் குழம்புவீர்கள்.

கடைசியில், "எந்த ஊரானால் என்ன? கொடுத்து வைத்தவர்கள்! உல்லாசமாகப் போகிறார்கள்!" என்று நினைப்பீர்கள்.

ஆனால் அந்தக் குடும்பத் தலைவரை ஒரு வார்த்தை கேட்டீர்களா? "ஐயா, நீர் என்ன உல்லாசமாகவா இருக்கிறீர்கள்?" என்று ஒரு வார்த்தைதான் கேளுங்களேன். அவர் என்ன பதில் சொல்வார் தெரியுமா?

"சம்சார சாகரத்தில் வாழ்க்கைப் படகைச் செலுத்தி விட்டேன். குடும்பத்துடன் கரை சேரத் தெரியாமல் தவிக்கிறேன். அதை ஒழுங்காகக் கரை சேர்க்க இங்கு பயிற்சிபெற முயல்கிறேன்" என்பார்.

ஆம், ஒவ்வொருவருக்கும் கவலை இருக்கத்தான் செய்யும். அது உலக நியதி. அதனிடையே மகிழ்ச்சியையும், உல்லாசத்தையும் காண முயல்பவனே மனிதன்!

சின்னக் கவலைகள் மனிதனின் உயர்ந்த பண்புகளை மேலே எழும்பவிடாமல் அழுத்தப் பார்க்கும். அதை எதிர்த்துத் துடுப்புப்போட்டு மேலே நீந்துபவனே அறிவாளி!

புகைப்படம்: வித்யாவ்ரதா

வழங்கினார் குருஷேவ். இரு நாடுகளுக்கு மிடையே கருத்துப் பரிமாற்றங்கள் அதிகரிப்பதற்கு ஒப்புக் கொண்டு விட்டு, பிறகு திடுமென விழித்துக் கொண்டவராக, "நான் எதற்கு ஒப்புக் கொண்டேன்? எதற்கு? ஆ! நான் ஒரு திறமைசாலியான வழக்கறிஞருடன் அல்லவா விவாதம் செய்து கொண்டிருக்கிறேன்!" என்றார். பின்னர், "நான் ஒரு சுரங்கத் தொழிலாளியாக இருந்தவன். நாங்கள் இலேசில் விட்டுக் கொடுக்க மாட்டோம். மாட்டவே மாட்டோம்!" என்றார்.

மற்றொரு நாள் நிக்ஸனுக்கு விருந்து அளித்தார் குருஷேவ். பிற்பகலில் ஆரம்பித்த விருந்து, ஐந்தரை மணி நேரத்துக்கு நீடித்தது! பேச்சு, பேச்சு, விவாதம், தர்க்கம்!

இடையில் ஒரு சந்தர்ப்பத்தில் குருஷேவ், "இதைப் பற்றி நான் ஏதும் கூறுவதற்கில்லை; நிபுணர்களின் அபிப்பிராயத்தைக் கேட்டறிய வேண்டும்" என்றார்.

"என்ன! குருஷேவ் விவாதத்தில் ஈடுபட மறுக்கும் விஷயமும் இந்த உலகத்தில் இருக்கிறதா?" என்று ஆச்சரியப்பட்டுக் கேட்டு விட்டார் நிக்ஸனின் மனைவி. விருந்துக்கு அழைக்கப்பட்டு, ஏழெட்டுப் பெண்மணிகள் வந்திருந்தபோதிலும், ஐந்தரை மணி நேர விவாதத்தின் போது பெண் குரல் ஒலித்தது இந்த ஒரு சமயத்தில்தான்!

பூகோள நோக்கில் அமெரிக்காவின் வடகோடி ராஜ்யமான அலாஸ்காவிலிருந்து ருஷ்ய எல்லை ஐம்பத்து மூன்று மைல். ஆனால் கொள்கை அளவில் இரு நாடுகளுக்கிடையில் உள்ள தூரமோ சொல்லத் தேவையில்லை. எனினும் நிக்ஸனின் ருஷ்ய விஜயம் இரு நாடுகளும் ஓரளவுக்கு நெருங்கி வரத் துணை புரியவே செய்தது.

* * *

கலிஃபோர்னியா ராஜ்யத்தில் யோர்பா லிண்டா என்ற சிறு கிராமத்தில் (ஜனத்தொகை முந்நூறு) இன்றைக்கு ஐம்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் பிறந்தார் நிக்ஸன். இவர் தகப்பனார் மளிகைக் கடையும் பெட்ரோல் பங்கும் வைத்திருந்தார். பள்ளி நேரம் போக மற்ற சமயங்களில் நிக்ஸன் கார்களுக்குப் பெட்ரோல் நிரப்புவார்; வீடு வீடாகப் போய் மளிகைச் சாமான்களைக் கொடுத்துவிட்டு வருவார். உபகாரச் சம்பளம் பெற்றுக் கல்லூரிப் படிப்பை மேற்கொண்ட நிக்ஸன், அப்போதே சொற்பொழிவுகளாற்றுவதில் சிறந்து விளங்கிப் பல பரிசுகளைப் பெற்றிருக்கிறார். சட்டப் பரீட்சையில் பாராட்டுக்குரிய வகையில் தேறினார். "இதற்கெல்லாம் காரணம் நான் மற்ற மாணவர்களைக் காட்டிலும் அறிவிற் சிறந்தவனாக இருந்தேன் என்பதல்ல. மற்றவர்களை விட நான் அதிகமாக உழைத்தேன் என்பதுதான்" என்கிறார் நிக்ஸன்.

வழக்கறிஞராகத் தொழில் நடத்தியவர் உலக யுத்தம் மூண்டதும் அமெரிக்கக் கடற்படையில் சேர்ந்து பணியாற்றினார். பிறகு 1946 முதல் அமெரிக்க அரசியலில் தீவிரப் பங்கெடுத்துக் கொண்டு வந்திருக்கிறார்.

நிக்ஸன் தமது சொற்பொழிவுகளில் அடிக்கடி வலியுறுத்துவது நேர்மை, ஒழுக்கம் இவற்றைத்தான். "அமெரிக்கரின் செல்வமும் சுகபோக வாழ்க்கையும் ஒரு முடிவல்ல; ஒரு லட்சியத்தை அடைவதற்கான சாதனங்களே. அந்த லட்சியம் தார்மீக உணர்வுதான்; ஆன்மீக உயர்வுதான்" என்று கூறுவார். "அபரிமிதமான செல்வம் இறையுணர்ச்சியையும், பண்பாட்டையும் நலியச் செய்யும்; இறுதியில் நாடே அழிந்து போகும்" என்று சரித்திரத்திலிருந்து மேற்கோள்கள் காட்டி எச்சரிப்பார். "உலகம் அமெரிக்காவைப் போற்றுகிறதென்றால் அது அமெரிக்காவிடம் உள்ள செல்வச் செழிப்புக்காகவோ அல்லது படை பலத்துக்காகவோ அல்ல. அமெரிக்கா மேற்கொண்டுள்ள சுதந்திர வாழ்முறைக்காகவும் இதர லட்சிய நோக்கங்களுக்காகவுந்தான். இதை மறக்க வேண்டாம்!"

* * *

நிக்ஸனுடைய வாழ்வில் ஏற்பட்ட நெருக்கடிகள் எல்லாவற்றிலும் மிகப் பெரியதான ஒன்று கென்னடியை அவர் தேர்தலில் சந்தித்ததுதான் என்றால் மிகையாகாது.

கென்னடியின் திறமையை, அறிவாற்றலை யாரும் குறைவாக மதிப்பிட்டு விட முடி

யாது. என்றாலும் அன்று அவரது எடுப்பான தோற்றமும், களையான முகமும், அவருடைய மனைவியின் அழகும் அவரது தேர்தல் வெற்றிக்குப் பெருந் துணை புரிந்தன என்பதையும் யாரும் மறுக்க மாட்டார்கள். கென்னடிக்கு சொற்பெருக்காற்ற நாவன்மை வெகுவாக இருந்தது. வழக்கறிஞர் நிக்ஸனும் இதில் சளைத்தவரல்லதான். ஆகவே இவ்விருவருடைய பேச்சுக்களும் விவாதங்களும் மிகவும் ருசிகரமாகவும் வெற்றி தோல்வியை எளிதில் நிர்ணயிக்க முடியாத வகையிலும் அமைந்து பெரும் பரபரப்பை ஏற்படுத்தின. ஆனால் நிக்ஸனுக்கு இல்லாத ஒரு பெரிய வசதி அன்று கென்னடிக்கு இருந்தது. கென்னடி எந்த ஒரு கட்டுப்பாடுமின்றி தம் விருப்பம் போல் பிரசார நோக்குடன் வெளுத்து வாங்க முடிந்தது. நிக்ஸனோ ஜனாதிபதி பதவிக்குப் போட்டியிடுகிற அதே சமயத்தில் துணை ஜனாதிபதி பதவியையும் வகித்து வந்ததால் பொறுப்புணர்ச்சியுடன் வார்த்தைகளை உதிரவிட வேண்டியிருந்தது.

தேர்தல் பிரசாரங்கள் ஓர் உச்ச கட்டத்தை அடைந்திருந்தபோது நிக்ஸனுக்குத் துரதிர்ஷ்டவசமாக ஒரு விபத்து நடந்து விட்டது. முழங்காலில் அடிபட்டுப் புரையோடிப் போய்ப் பத்துப் பன்னிரண்டு நாட்கள் ஆஸ்பத்திரியில் இருக்கும்படியாகி விட்டது. ஆஸ்பத்திரியிலிருந்து வெளியே வந்த பிறகும் வலி குறையாததால் அவர் முன்போல் துரித கதியில் இயங்க முடியவில்லை.

தேர்தலை முன்னிட்டு அமெரிக்காவில் உள்ள ஐம்பது ராஜ்யங்களிலும் சுற்றுப் பயணம் செய்வேன் என்று சொல்லியிருந்தார் நிக்ஸன். இந்த வாக்குறுதியை நிறைவேற்றியே தீருவது என்று பிடிவாதமாக இருந்ததால் உடல் தளர்ந்து களைத்துப் போனார் அவர். போதாக் குறைக்கு உடல் பருத்துவிடக் கூடாது என்பதால் ஆகார விஷயத்தில் நியமமாக இருந்தார். இதனாலும் சோர்வு உண்டாயிற்று. இவையெல்லாம் நிக்ஸனுக்குப் பாதகமாக வேலை செய்தன. அப்படி யிருந்தும் இருபதாம் நூற்றாண்டு அமெரிக்கச் சரித்திரத்திலேயே மிகக் குறைந்த வோட்டுக்கள் வித்தியாசத்தில் தோற்றவர் நிக்ஸன்தான்!

இந்தத் தேர்தலின்போது வெற்றி முகமாக இருந்த நிக்ஸனின் வாய்ப்பைத் தோல்விப் பக்கமாகத் திசை திருப்பி விட்டது ஒரு டெலிவிஷன் காட்சிதான். அமெரிக்கச் சரித்திரத்திலேயே முதன் முதலாக ஜனாதிபதி தேர்தல் பிரசாரத்துக்கு டெலிவிஷன் பயன்படுத்தப் பட்டது. ஒரு நிகழ்ச்சியில் கென்னடி, நிக்ஸன் இருவரும் தோன்றிப் பிரச்னைகளை விவாதிக்க வேண்டும் என்று ஏற்பாடாகி யிருந்தது. கடைசி நிமிஷம்வரை நிக்ஸன் தாம் தயாரித்து வைத்திருந்த குறிப்புக்களைச் சரிபார்த்துக் கொண்டிருந்தார். காமிரா முன், பரீட்சை எழுத முற்படும் ஒரு மாணவனைப் போல் காணப்பட்டார். ஆனால் கென்னடியோ வெகு அலட்சியமாகக் கால் மேல் கால் போட்டபடி நாற்காலியின் முதுகில் ஒரு கரத்தைத் துவள விட்டு, சற்று ஒருக்களித்த நிலையில், வசீகரமான தம் முகத்தில் புன்னகை தவழ அமர்ந்திருந்தார். டெலிவிஷன் காட்சியில் வாதத் திறமையை விட தோற்றம்தான் முக்கியத்வம் பெறும் என்பதை நிக்ஸன் அடியோடு மறந்து விட்டிருந்தார். அவர் அணிந்திருந்த உடை வெளிறிய நிறத்தில் இருந்ததால் ஸ்டுடியோ சுவரின் வெள்ளை நிறத்துடன் ஒன்றிப் போய்விட்டது. ஆனால் கென்னடியின் உடை அழுத்தமான நிறத்தில் இருந்ததால் அவர் உருவம் பளிச் சென்று தோன்றியது. நிக்ஸன் கால் மேல் கால் போட்டுக் கொள்ள முடியாமல் முழங்கால் வேதனை நீடித்தது. இரண்டு கரங்களும் இரண்டு துடைகளின் மீது பதிந்திருந்தன. நிமிர்ந்து அமர்ந்திருந்தார். மொத்தத்தில் அந்த டெலிவிஷன் காட்சியைக் கண்ட ஆயிரமாயிரம் அமெரிக்க மக்களுக்கு நிக்ஸன் ஒரு மாணவனாகவும் கென்னடி ஒரு பேராசிரியராகவும் தோற்றமளித்தனர். காதில் விழுந்தது எளிதில்

## மகாத்மாவின் மணிமொழி



கடவுளை அடியோடு விலக்கிவிட்டு, உயிருள்ள தெய்வ சக்தியிடம் உயிருள்ள நம்பிக்கை வைக்கும் தேவையில்லாமலே மனித வாழ்வின் உன்னத நிலையை அடைய வாய்ப்பு உண்டு என்று வற்புறுத்துவதே இன்றைய நாகரிகமாக இருக்கிறது. தங்களை விட எண்ணிறந்த மடங்கு உயர்ந்த ஒரு சக்தி தேவையில்லை என்று எண்ணி அதனிடம் நம்பிக்கை வைக்காதிருப்பவர்களிடம் தரும நியதியின் சத்தியத்தை வேரூன்றச் செய்கிற திறமை எனக்கில்லை. இதை வெளிப்பட ஒப்புக்கொண்டாக வேண்டும். ஆனால் என் சொந்த அனுபவத்தைச் சொல்கிறேன். உயிருள்ள தரும நியதி ஒன்று உள்ளது. சகல பிரபஞ்சமும் அதற்கு அடங்கியே இயங்குகிறது. அதனிடம் அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தாலன்றி வாழ்வில் பரிபூரணத்துவம் பெற முடியவே முடியாது.

மறந்து விட்டது. கண்ணுக்குத் தெரிந்தது இதயத்தில் நிலைத்துவிட்டது!

டெலிவிஷன் காட்சி முடிந்த பிறகு நிக்ஸனின் தாயார் டெலிபோனில் மகனை அவசரமாக அழைத்தாள். ''உன் உடம்பெல்லாம் சரியாக இருக்கிறதல்லவா?'' என்று வினவினாள். நிக்ஸனுடைய தாயாருக்கே இப்படிக் கவலை ஏற்பட்டிருந்தால், நிக்ஸனை டெலிவிஷனில் பார்த்த மற்ற மக்களுக்கு அவர் எப்படித் தோற்றமளித்திருப்பார் என்பதை எளிதில் யூகிக்கலாம்.

இரண்டாவது முறையாகப் பிரிதொரு நாள் நடந்த டெலிவிஷன் விவாதத்தின் போது நிக்ஸன் முன் ஜாக்கிரதையாக இருந்தார். 'மேக் அப்' போட்டுக் கொள்ளக்கூடச் சம்மதித்தார். ஆனால் முதல் தடவையில் மக்களின் மனத்தில் பதிந்துவிட்ட ஒரு 'பள்ளி மாணவன்' உருவத்தை அதனால் அழித்துவிட முடியவில்லை.

தேர்தல் முடிவு வந்தபோது நிக்ஸன் குடும்பத்தில் மிகவும் அதிகமாகக் கலங்கிப்போனது அவரது மகள் பட்ரீஷியாதான். அவளால் கண்ணீரைக் கட்டுப்படுத்தவே முடியவில்லை. விம்மி விம்மி அழுது கொண்டிருந்த அவளிடம் நிக்ஸன், ''தோற்றது நானல்லவோ நீ ஏன் அழுகிறாய்?'' என்று சிரித்தபடி கேட்டார். ''நான் எனக்காகவா அழுகிறேன்? உங்களுக்காகத்தான்! நீங்கள் மெய் வருத்தம் பாராது எவ்வளவு சிரமப்பட்டீர்கள் என்பது எனக்குத் தெரியாதா?'' என்றாள் பட்ரீஷியா. ''ஜனநாயக அரசியலில் ஈடுபட எண்ணுகிறவன் கற்க வேண்டிய முதல் பாடம் தோல்வியைக் கண்ணியமாகவும், தைரியமாகவும் ஏற்பது எப்படி என்பதுதான்'' என்று சொல்லி அவளைச் சமாதானப்படுத்தினார் நிக்ஸன்.

''அப்பா! தேர்தலில் நீங்கள் தோற்றுப் போயிருக்கலாம்; ஆனால் மக்களின் உள்ளங்களை நீங்கள் வென்றுவிட்டீர்கள் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்'' என்றாள் ஜூலி—நிக்ஸனின் மற்றொரு மகள்.

ஜூலியின் நம்பிக்கை வீண் போகுமா அல்லது நிறைவேறுமா என்பதை வெகு சீக்கிரம் அமெரிக்கத் தேர்தல் நிரூபித்து விடுமல்லவா?

—வி. ராஜேந்திரன்



## பள்ளிக்கூடத்தில் ரயில் நிலையம்!

புகைவண்டி நிலையம். ரயில் வருவதற்கான மணி அடிக்கிறது. பிரயாணம் செய்யப் போகும் மக்களின் ஆரவாரம், வியாபாரிகளின் விற்பனைக் குரல், குழந்தைகளின் கூச்சல். இப்படி ரயில்வே ஸ்டேஷனில் நாம் போய் நின்றால் என்னென்னவிதமான ஒலிகளைக் கேட்போமோ அவைகளையெல்லாம் கேட்கிறோம். இரண்டாவது மணி அடிக்கிறது. இரண்டாவது பிளாட்பாரத்துக்கு வண்டி வரப் போவதாக அறிவிப்பு அலறுகிறது. அதற்கான கைகாட்டி இறங்குகிறது. லெவல் கிராஸிங் கேட் தானாகத் திறந்து, வரும் ரயிலுக்கு வழிவிட்டுத் தயாராக இருக்கிறது. தூரத்தில் ரயிலின் 'கூ' ஒலி கேட்கிறது. பிளாட்பாரத்தில் பரபரப்பு. மலைப் பாதைக்குள்ளிருந்து ரயில் வளைந்து வளைந்து வருகிறது. பிளாட்பாரத்தினுள் வந்து நின்றதும் நீராவியைப் பெருமூச்சாகக் கக்கிவிட்டு ஓய்கிறது. அடுத்து கூட்ஸ் வண்டி மறுபக்கத்திலிருந்து ஆறாவது பிளாட்பாரத்துக்கு வருகிறது. தண்டவாளத்தின்மீது சக்கரங்கள் உருளும் 'கிளாங்' ஓசை. லைன் மாறுகிறது.... சாமான் பெட்டிகளை 'ஷண்டிங்' செய்து இணைத்துக் கொண்டு வேறு லயனில் மாறி வருகிறது. பால் டின்களை அதற்குரிய மேடை மீது இறக்குகிறது - தானாகவே தான்! பிறகு வேறு பெட்டியை இணைத்துக் கொண்டு அடுத்த மேடை அருகே போகிறது. வாகனின் கதவு தானாகத் திறந்து கொள்ள ஆடு மாடுகள் அதற்குள் வரிசையாகச் செல்கின்றன. கதவுமூடிக் கொள்கிறது. முக்கி முனகியபடி கிளம்புகிறது சரக்கு ரயில். பிரயாணிகளின் எக்ஸ்பிரஸ்ஸும் வேறு பிளாட்பாரத்திலிருந்து புறப்படுகிறது. ரயில்வே ஸ்டேஷனின் கோலாகலம் முடிகிறது.

இத்தனையும் ஏதோ ஒரு பெரிய ஸ்டேஷனில் நிகழும் நேர்முக வர்ணனை என்று தானே நினைத்தீர்கள்? அது தான் இல்லை. இத்தனையும் சென்னை புரசைவாக்கம் எம். ஸி. எம். உயர்நிலைப் பள்ளியின் முதல் மாடியில் நிகழும் அற்புத பொம்மை ரயில்வே ஸ்டேஷனின் காட்சிகள். மின்சாரத்தினால் தானாக இயங்கும் வண்ணம் திரு சேவியர் தம்பதிகள் இந்த அற்புத உலகத்தை ஆக்கித் தந்திருக்கிறார்கள். சகலவிதமான ரயில்வேநிலையச் சாதனங்களையும் சின்னஞ்சிறிய அளவில் உருவாக்கிப் பார்ப்பவர் பரவசப்படும்படி அமைத்திருக்கிறார்கள். ஒலிகளெல்லாம் டேப்ரிக்கார்டர் செய்து நிஜமேபோல இருக்கிறது.

எம். ஸி. எம். மாணவர்பள்ளியின்பிளாட்டினம் ஜூபிலியும் லேடி எம். ஸி. எம். பெண்கள் பள்ளியின் வெள்ளிவிழாவும் அண்மையில் நடக்க விருக்கின்றன. அதன் நினைவாகப் பள்ளியின் பகுதிகளை விஸ்தரிக்க நிதி திரட்டுகிறார்கள். இந்த அற்புத ரயில் நிலையக் கண்காட்சியில் 'வசூலாகும்' தொகையை அதற்குப்பயன் படுத்தப் போகிறார்கள்.




தயாரிப்பு:
வாண்டுமாமா



## தவளைத் தாவல்

மூடி கிழிக்கப்பட்ட பெட்டிகள்தானே இருக்கின்றன உங்களிடம்? பரவாயில்லை. அந்தப் பன்னிரண்டு பெட்டிகளையும் ஒரு பெரிய அட்டைப் பெட்டிக்குள் (படத்தில் காட்டியுள்ளபடி) அடுக்குங்கள். ஒவ்வொரு பெட்டிக்கும் 5, 10, 15, 20, 25, 30, 35, 40, 45, 50, 55, 60 என்று குறியிட்டு எண்களைக் கொடுங்கள். உங்களிடம் உள்ள நல்ல பந்தைத் (சற்று தட்டினால் எழும்பிக் குதிக்க வேண்டும்.) தரையில் அடியுங்கள். தரையில் பட் பந்து எழும்பித் தாவி நீங்கள் அடுக்கி வைத்துள்ள பெட்டிக்குள் போய் விழ வேண்டும். அதற்கு ஏற்றபடி அதை அடியுங்கள். பந்து எந்தப் பெட்டிக்குள் போய் விழுகிறதோ அதன் எண்ணிக்கைதான் ஸ்கோர். பந்து பெட்டிக்குள் விழாமல் வெளியே தாவிப் போகுமானால் அடுத்தவர் ஆட வேண்டும். இப்படியே மாற்றி மாற்றி ஆடி முதலில் 500 எண்ணிக்கையை யார் எடுக்கிறார்களோ அவர்களே வெற்றி பெற்றவர்களாகக் கொள்ள வேண்டும்.



மந்திரமில்லை தந்திரம்

## துண்டாகும் பெண் உடல்

இந்திர ஜாலம் என்று கூறி மந்திரவாதிகள் ஒரு பெண்ணை மேஜை மீதுள்ள ஒரு பெட்டிக்குள் படுக்க வைத்து மூடி விடுவார்கள். மந்திரவாதியும் அவரது துணைவரும் ஒரு பெரிய ரம்பத்தைக் கொண்டு அந்தப் பெட்டியின் நடுவே அறுப்பார்கள். ஒரு பொட்டு ரத்தம் வெளியே வராது. குட்டிச்சாத்தான் குடித்து விடுமாம் ரத்தத்தை! பெட்டியைத் துண்டாடி இரண்டாக்கிப் பிரித்துக் காட்டுவார்கள். ஒரு பக்கம் பெண்ணின் தலை. மறு பாதியில் பெண்ணின் கால். பார்க்கப் பயங்கரமாக இருக்கும். இந்த மந்திரவேலை கூடத் தந்திரம்தான். இது எப்படிச் செயல்படுத்தப்படுகிறது தெரியுமா? பெட்டியுள்ள மேஜை வெறும் பலகையல்ல. அதுவும்கூட ஒரு பெட்டிதான். அதில் இன்னொரு பெண் ஒளிந்து கொண்டிருப்பாள். (படம் 1) பெட்டிக்குள் படுத்துக் கொண்ட பெண் தன் உடலைச் சரிபாதியாகக் குறுக்கிக் கொண்டு பெட்டியில் ஒரு பாதிக்குள் முடங்கி விடுவாள். அவள் தலை மட்டும் வெளியே இருக்கும். (படம் 2) மேஜையில் ஒளிந்து கொண்டிருக்கும் பெண் பெட்டியின் மறுபாதியின் கீழுள்ள ரகசியக் கதவு வழியே தன் காலை நுழைத்துப் பெட்டியின் மறுபாதியில் பெட்டிக்குள் இருக்கும் பெண்ணின் கால் இருக்க வேண்டிய பாகத்தில் உள்ள துவாரத்தின் வழியே வெளியே தெரியும்படி செய்வாள். (படம் 3) இப்போது சொல்லுங்கள். ரம்பம் எந்தப் பெண்ணை இரண்டாக அறுக்க முடியும்? பெட்டி இரண்டாக்கப்பட்டு விலக்கிக் காட்டும்போது ஒரு பக்கத்தில் ஒரு பெண்ணின் தலையும் மறுபக்கத்தில் மற்றொரு பெண்ணின் காலுமே தென்படுகின்றன. மந்திரவாதி யாரையும் வெட்டுவதில்லை. ரகசியம் புரிந்ததா?



▫ 15 ▫

## எண்ணின் பெருமை

உன் நண்பனைப் பத்துக்குள் ஓர் எண்ணை நினைத்துக் கொள்ளச் சொல்லுங்கள் பிறகு அதை ஒன்பதால் பெருக்கிக் கொள்ளச் சொல்லுங்கள். வந்த விடையை ரகசியமாக வைத்துக் கொள்ளச் சொல்லி அவனிடம் 12345679 என்ற இந்த இலக்கமெழுதிய காகிதத்தைக் கொடுத்து (இதில் 8ம் இலக்கம் விடப்பட்டுள்ளதைக் கவனிக்க). ஒன்பதால் பெருக்கி வந்த எண்ணினால் இதையும் பெருக்கச் சொல்லுங்கள். பெருக்கி முடிந்ததுமே அவன் கண்கள் வியப்பினால் விரியும்.

"என்ன! நீ நினைத்துக் கொண்ட எண்களாகவே விடை வருகிறதா?" என்று கேட்டால் திகைத்துப் போய் "அது எப்படிடா?" என்பான். "அதுதான் எண்ணின் பெருமை. ஒன்பதின் மகிமை உரைத்திடப்போமோ?" என்று சொல்லுங்கள்.

| | |
|---|---|
| உதாரணமாக | 12345679 |
| | × 45 |
| நினைத்தது 5 | ------------- |
| அதை ஒன்பதால் | 61728395 |
| பெருக்க | 49382716 |
| 9 × 5 = 45 | ------------- |
| | 555555555 |



# நாட்டியமாடும் மீன்கள்



நீங்கள் கடற்கரைக்குப் போகிறீர்கள். அலைகள் உங்கள் காலைத் தொட்டுச் செல்ல வேண்டுமென்பதற்காக நீர்ப் பரப்பின் அருகே போய் நிற்கிறீர்கள். ஒரு பெரிய அலை சுருண்டு வருகிறது. அத்துடன் ஏராளமான வெள்ளி மீன்கள் துள்ளி வருகின்றன. வடிந்து போகும் அலையோடு போகாமல் அவை ஈர மணலில் தங்கள் வாலைப் புதைத்து நெளிந்து நடனமாடுகின்றன. உங்களுக்கு எப்படி இருக்கும்? ஏதோ விபரீதமென்று எண்ணி அந்த மீன்களைக் காப்பாற்ற அவைகளை எடுத்துக் கடலுக்குள் வீசுவீர்கள், இல்லையா? ஆனால் நீங்கள் நிற்பது கலிபோர்னியா நாட்டின் கடற்கரையானால் அந்த மீன்களின் செயலைக் கண்டு அதிர்ச்சியடையவே வேண்டாம். நீரிலிருந்து வெளிப்பட்டு மணலில் வாலைப் புதைத்துக் கொண்டு ஏழு அங்குல நீளமுள்ள மீன்கள் நடனமாடும் விந்தையை உலகில் வேறு எங்குமே காண முடியாது. கலிபோர்னியாவின் கடற்கரைப் பகுதிகளில்தான் காணலாம். நம்மில் சிலருக்குச் சில பகுதிகளின் சீதோஷ்ண நிலைதான் ஒத்துக் கொள்ளும் என்பதில்லையா? அப்படித்தான் குருனியன் (GRUNION) என்ற இந்த மீன்களுக்குக் கலிபோர்னியாவின் கடற்கரைகள்தாம் ஒத்துக் கொள்ளும் போலும். இந்த மீன்கள் நடனமாடுகின்றன. இல்லை, பார்ப்பதற்கு அப்படித் தோன்றினாலும் உண்மையில் அவை முட்டையிடவே செய்கின்றன. மார்ச் மாதத்திலிருந்து ஆகஸ்ட் மாதம் வரை அலைகள் அதிகமாக உள்ள ஒருசில இரவுகளில்தான் குருனியன்கள் இப்படிப் பீச்சுக்குப் படையெடுத்து வருகின்றன. கடல் பொங்குவதற்கான நேரம் இந்த மீன்களுக்குத் தெரியும். அதற்குப் பதினைந்து நிமிஷங்களுக்குமுன் இவைகள் ஆயிரக்கணக்கில் கடலுக்கு மேலே வந்து மொய்த்துக் கொள்ளுகின்றன. ஒவ்வோர் அலையும் கடற்கரையை நோக்கி உருளும் போதும் இவைகள் நீந்தியபடி கரையை அடைகின்றன. நல்ல உயரமான பகுதிக்கு வந்ததும் பெண் மீன்கள் தங்கள் வாலை மணலில் ஊன்றிப் புதைத்துக் கொண்டு முட்டைகளை இடுகின்றன. அப்போது இந்த மீன்களைப் பார்த்தால் நெட்டநெடுவாக நிற்பது போலவே இருக்கும்.

இப்படி இவைகள் செயல்பட வெகுநேரமாகும் என்று நினைக்கிறீர்களா? அதுதான் இல்லை. இருபது முப்பது வினாடிகளுக்குள்— ஓர் அலையோடு கரை மீதேறிய மீன்கள் முட்டைகளை இட்டுவிட்டு அடுத்த அலை திரும்பும் போது அந்த ஓட்டத்தோடு ஓடிப் போகின்றன. என்ன நடந்தது என்பதை நாம் கவனிப்பதற்குள் இத்தனையும் நடந்து முடிந்து விடும்.

குருனியன்கள் முட்டையிடும் விதத்தைப் பற்றி அறிந்தவர்கள் இவைகள் கடற்கரையை வந்து மொய்க்கும் இரவுகளில் பீச்சில் காத்திருந்து ஏராளமாக மீன் அறுவடை செய்வார்கள். ஆனால் அவற்றைப் பிடிப்பதற்கான வேகமும் களுவும் தெரிந்திருக்க வேண்டும்.

மணலுக்குள் முட்டையிட்டபின் இரண்டு வாரங்களுக்குக் கடல் கொந்தளிப்பின்றி இருக்கும். மீன் 'நர்ஸரி'யை அலைகள் அணுகுவதில்லை. மணல் மூடிய முட்டைகள் சூரிய வெப்பத்தினால் கதகதப்புப் பெறுகின்றன. மறுபடியும் கடல் பொங்கும் காலம் வருகிறது. அலைகள் கரையில் வந்து மோதி மணலைக் கரைத்துக் கொண்டு ஓடும். புதையுண்ட முட்டைகள் வெளிப்படுகின்றன. உடனே முட்டைகள் பொரிந்து குஞ்சுகளும் வெளிப்பட்டு நீந்தியபடியே அலையோடு இழுத்துச் செல்லப்பட்டுக் கடலை அடைந்து விடுகின்றன. நன்றாக வளர்ந்து முட்டையிடும் பருவத்தை அடைந்த பிறகு முட்டைகளை இடவே அவை மறுபடி கரைக்கு வருகின்றன.

கடல் அதிசயங்களில் ஒன்று இந்த குருனியன்களின் செயல். கலிபோர்னியாவின் கடற்கரையை மட்டும் இவை ஏன் முட்டையிடத் தேர்ந்தெடுக்கின்றன? கடல் பொங்குவதும், இரண்டு வாரங்கள் கடல் அமைதியாக இருப்பதும், மணலுக்குள் புதைந்திருக்குமாறு தான் இட்ட முட்டைகளைக் கடல் அலைகள் உயிருள்ள குஞ்சுகளாகத் தன்னிடம் கொண்டு வந்து சேர்க்கும் என்பதும் பெண் குருனியன்களுக்கு எப்படித் தெரிந்திருக்கிறது? மர்மமான விஷயம்தான் இது. இயற்கையின் எத்தனையோ விநோதங்களில் இதுவும் ஒன்று.



## வளையாத விரல்

உங்கள் தோழியைக் கூப்பிட்டுப் படம் ஒன்றில் காட்டியுள்ளபடி வலது கைக் கட்டை விரலை உள்ளங் கைக்குள் நன்றாக மடித்துக் கொள்ளச் சொல்லுங்கள். பிறகு அதே நிலையில் வலது தோள் பட்டையை அக் கையின் மற்ற நான்கு விரல்களால் தொடும்படி கூறுங்கள். (படம் 2) தொட்டுக்கொண்டே அதே நிலையில் கட்டை விரலைப் பிரிக்கச் சொல்லுங்கள். இப்போது பிரித்த கட்டை விரலை அதே பழைய இடத்துக்குக் கொண்டு போய் மடக்கிக் காட்டச் சொல்லுங்கள். முடியாது, முடியவே முடியாது!



உபாத்தியாயர்: 1938ம் ஆண்டு பிறந்தவர்களுக்கு இப்போது என்ன வயதாகும்?

பையன்: பிறந்தது ஆணா பெண்ணா, சார்?

# சிங்கார்
## குங்கும்



உங்கள் மேனி வண்ணத்திற்கும், சேலைக் கலர்களுக்கும் இசைவான பல நிறச்சாயல்களில் கிடைக்கும் சிங்கார் குங்கும், உங்கள் எழிலுக்கு எழில் கூட்டி-முகத்திற்குப் பொலிவைத் தருகிறது.

அது எடுப்பான ப்ளாஸ்டிக் குப்பி களில் அல்லது ட்யூபுகளில் கிடைக்கிறது.



Bottle design Registered
Patent No: 128338

***PIPIS PRODUCTS***

விசாரணைகளுக்கு எழுதவும்: பேரமவுண்ட் பிராடக்ட்ஸ்

A-30-ஸ்ரீ ராம் இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், G. D. அம்பேத்கார் ரோடு, பம்பாய்-31. DD.

# பொன்னியின் செல்வன்



அமரர் கல்கி

## மூப்பத்திரண்டாம் அத்தியாயம்

## பரிசோதனை

சின்னப் பழுவேட்டரையரைக் கண்டதும் வந்தியத்தேவன் சண்டையை நிறுத்திவிட்டு அவரை நோக்கி நடந்தான். காவலர்கள் எழுந்து ஓடிவந்து அவனைப் பிடித்துக் கொண்டார்கள். அவர்களை அவன் சிறிதும் இலட்சியம் செய்யாமல் நாலு அடி முன்னால் நடந்து வந்து, ''தளபதி! நல்ல சமயத்தில் தாங்கள் வந்து சேர்ந்தீர்கள். இந்தப் பக்காத் திருடர்கள் என்னுடைய உடைமைகளைத் திருடிக் கொண்டதுமல்லாமல், என்னையும் கொல்லப் பார்த்தார்கள்! விருந்தாளியை இப்படித்தானா நடத்துவது? இதுவா தஞ்சாவூர் சம்பிரதாயம்? நான் தங்களுக்கு மட்டும் விருந்தாளியல்ல; சக்கரவர்த்திக்கும் விருந்தாளி; சக்கரவர்த்தினி சொன்னதைத்தான் தாங்களும் கேட்டீர்களே! பட்டத்து இளவரசரிடமிருந்து ஓலை கொண்டு வந்த தூதன்! அப்படிப்பட்ட என்னை இந்தப் பாடுபடுத்துகிறவர்கள் மற்றவர்களை என்ன செய்துவிட மாட்டார்கள்! இப்படிப்பட்ட திருடர்களைத் தங்கள் பணி ஆட்களாக வைத்துக் கொண்டிருப்பது பற்றி ஆச்சரியப்படுகிறேன். எங்கள் தொண்டைமண்டலத்தில் இப்படிப்பட்ட திருடர்களை உடனே கழுவில் ஏற்றிவிட்டு மறு காரியம் பார்ப்போம்!'' என்று சரமாரியாய்ப் பொழிந்தான்.

மூன்று வீரர்களை ஏக காலத்தில் எதிர்த்துப் புரட்டிக் கிழே தள்ளிய வாலிபனுடைய வீரச் செயலைப் பற்றிய வியப்பு இன்னும் பழுவேட்டரையரின் மனத்தை விட்டகலவில்லை. இத்தகைய வீரனை நாம் நமது காவற்படையில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்னும் ஆசை அவருக்கு அதிகமாயிற்று. எனவே, அவர் சாந்தமான குரலில், ''பொறு! தம்பி! பொறு! அப்படியெல்லாம் இவர்கள் செய்திருப்பார்கள் என்று தோன்றவில்லை! இவர்களை விசாரித்துப் பார்க்கிறேன்!'' என்றார்.

''நான் கோருவதும் அதுதான்! இவர்களை விசாரியுங்கள்; விசாரித்து நீதி வழங்குங்கள்! என்னுடைய உடையும் உடைமையும் என்னிடம் திரும்பி வருவதற்கு ஏற்பாடு செய்யுங்கள்!'' என்றான் வல்லவரையன்.

''அடே! இந்தப் பிள்ளையை விட்டு விட்டு இப்படி வாருங்கள்! நான்



சொன்னது என்ன? நீங்கள் செய்தது என்ன? இவன் மீது ஏன் கை வைத்தீர்கள்?'' என்று கோபமாகக் கேட்டார் கோட்டைத் தளபதி.

''எஜமானே ! தாங்கள் சொன்னது சொன்னபடியே செய்தோம். இவரை எண்ணெய் முழுக்காட்டிப் புதிய ஆடைகளையும் ஆபரணங்களையும் அணிவித்தோம். அறுசுவை உண்டி அளித்தோம். சித்திர மண்டபத்துக்கும் அழைத்து வந்தோம் ! இவர் சிறிது நேரம் சித்திர மண்டபத்தில் உள்ள சித்திரங்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். திடீரென்று நினைத்துக் கொண்டு இவருடைய பழைய உடைகளைக் கேட்டார். உடனே எங்களைத் தாக்கவும் ஆரம்பித்தார்!'' என்றான் அவ்வீரர்களில் ஒருவன்.

''ஒரு சிறு பிள்ளையிடமா மூன்று தடியர்கள் அடிபட்டு விழுந்தீர்கள் !'' என்று கூறி இரத்தக் கனல் வீச விழித்துப் பார்த்தார்.

''எஜமான்! அரண்மனை விருந்தாளியாயிற்றே என்று யோசித்தோம். இப்போது சற்று அனுமதி கொடுங்கள் : இவனை உடனே வேலை தீர்த்து விடுகிறோம்.''

''போதும், உங்கள் வீரப் பிரதாபம்! நிறுத்துங்கள்! தம்பி !.... நீ என்ன சொல்லுகிறாய்?''

''இவர்களுக்கு அனுமதி கொடுங்கள் என்றுதான் சொல்கிறேன். எனக்கும் அனுமதி கொடுங்கள். சோழ குலத்துப் பகைவர்களோடு போராடிக் கொஞ்சம் நாள் ஆயிற்று. தோள்கள் தினவெடுக்கின்றன. அரண்மனை

விருந்தாளிகளை எப்படி நடத்த வேண்டுமென்று இவர்களுக்குப் பாடம் கற்பிக்கிறேன்!'' என்றான் நமது வீரன்.

சின்னப் பழுவேட்டரையர் புன்னகை புரிந்து, ''தம்பி! உன் தோள் தினவைத் தீர்த்துக் கொள்வதைச் சோழப் பகைவர்களோடேயே வைத்துக் கொள்! சக்கரவர்த்தி நோய்ப்பட்டிருக்கும் நிலையில் தஞ்சைக் கோட்டைக்குள் இவ்விதச் சண்டை, சந்தடி ஒன்றும் உதவாது என்று கட்டளை!'' என்று சொன்னார்.

''அப்படியானால் என்னுடைய உடைகளையும் உடைமைகளையும் உடனே கொண்டு வந்து கொடுக்கச் சொல்லுங்கள்!''

''எங்கேடா அவை?''

''எஜமான்! தங்கள் கட்டளைப்படி பத்திரப்படுத்தி வைத்திருக்கிறோம்.''

''தளபதி! இவர்கள் எப்படிப் புளுகுகிறார்கள், பாருங்கள்! சற்று முன் உடைகளை வெளுக்கப் போட்டிருப்பதாய்ச் சொன்னார்கள். இப்போது தாங்கள் 'பத்திரப்படுத்தி' வைக்கச் சொன்னதாகக் கூறுகிறார்கள். சற்றுப் போனால் தங்களுக்கே திருட்டுப் பட்டம்கூடக் கட்டி விடுவார்கள்!'' என்றான் வந்தியத்தேவன்.

தளபதி காவலர்களைப் பார்த்து, ''முட்டாள்களா! இந்தப் பிள்ளைக்குப் புது உடைகள் கொடுக்கும்படி மட்டுந்தானே சொன்னேன்? பழையவைகளைப் பற்றி நான் ஒன்றுமே சொல்லவில்லையே?... இந்த மூடர்கள் என்னவோ உளறுகிறார்கள், தம்பி! போனால் போகட்டும்; பழைய உடையைப் பற்றி எதற்காக இவ்வளவு கவலைப்படுகிறாய்? அதற்குள் ஏதாவது உயர்ந்த பொருள் வைத்திருந்தாயோ?'' என்று கேட்டார்.

''ஆம்; வழிநடைச் செலவுக்காகப் பொற் காசுகள் வைத்திருந்தேன்....'' என்று வந்தியத்தேவன் சொல்வதற்குள், ''அதற்காக நீ கவலைப்பட வேண்டாம். உனக்கு வழிச் செலவுக்கு எவ்வளவு பொன் வேண்டுமோ அவ்வளவு தருகிறேன்!'' என்றார் பழுவேட்டரையர்.

''தளபதி! நான் இளவரசர் கரிகாலருடைய தூதன். பிறரிடம் கை நீட்டிப் பணம் பெறும் வழக்கம் என்னிடம் கிடையாது....''

''அப்படியானால், உன்னுடைய உடைகளையும் அதற்குள்ளிருந்த பொற்காசுகளையும் திருப்பி உன்னிடம் சேர்ப்பிக்கச் செய்கிறேன். கவலைப்படாதே! உன் உடையில் வேறு பொருள் ஒன்றும் இல்லையல்லவா?''

வல்லவரையன் ஒரு கணம் யோசித்தான். அந்தத் தயக்கத்தைச் சின்னப் பழுவேட்டரையரும் பார்த்துக் கொண்டார்.

''வேறொரு முக்கியமான பொருளும் என் அரைச் சுற்று ஆடையில் இருக்கிறது. அதை உங்கள் ஆட்கள் தொட்டிருக்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன். தொட்டிருந்தால் அவர்கள் தொலைந்தார்கள்!....''

''ஆகா! உனக்கு எத்தனை கோபம் வருகிறது? எங்கே, யாரிடத்தில் பேசுகிறோம் என்பதை மறந்து விட்டே பேசுகிறாய். சிறு பிள்ளையாயிற்றே என்று மன்னித்து விடுகிறேன். அப்படிப்பட்ட பொருள் என்ன?''

''தளபதி! அதைச் சொல்வதற்கு இல்லை. அது அந்தரங்க விஷயம்!''

''தஞ்சைக் கோட்டைக்குள் எனக்குத் தெரியாத அந்தரங்கம் ஒன்றும் இருக்க முடியாது!''

''இளவரசர் கரிகாலர் என்னிடம் ஒப்புவித்த அந்தரங்க விஷயம்.''

''இளவரசர் வடதிசையின் மாதண்டநாயகர். அவருடைய அதிகாரம் பாலாற்றுக்கு வடக்கே செல்லும். இங்கே சக்கரவர்த்தியின் அதிகாரந்தான் செல்லும்!''

''தளபதி! புலிக் கொடி பறக்கும் இடமெல்லாம் சக்கரவர்த்தியின் அதிகாரந்தான். அதில் என்ன சந்தேகம்?''

''ஆகையினால்தான், இந்தக் கோட்டைக்குள்ளே எனக்குத் தெரியாத அந்தரங்கம் எதுவும் இருக்க முடியாது என்று சொல்லுகிறேன். சக்கரவர்த்தியின் க்ஷேமத்தைக் கருதித்தான்!''

''தளபதி! சக்கரவர்த்தியைக் கண்ணுங் கருத்துமாய்க் காப்பாற்றி வருவதற்காகத் தங்களுக்கும் பெரிய பழுவேட்டரையருக்கும் சோழ சாம்ராஜ்யம் நன்றிக் கடன் பட்டிருக்கிறது. இன்றைக்குச் சக்கரவர்த்தி தங்களைப் பாராட்டியதும் என் காதில் விழுந்தது. தங்களுக்குப் பயந்து கொண்டுதான் யமன் தஞ்சைக் கோட்டைக்குள் புகுந்து வராமல் தயங்கிக் கொண்டிருக்கிறான் என்று சக்கரவர்த்தி சொன்னாரே? அது எவ்வளவு பொருள் பொதிந்த வார்த்தை!''

''ஆம், தம்பி! பழையாறையிலிருந்து சக்கரவர்த்தியை நாங்கள் இங்கே அழைத்து வந்து கட்டுக் காவலுக்குள் வைத்திராவிட்டால், இத்தனை நாளும் என்ன விபரீதம் நடந்திருக்குமோ,

தெரியாது. பாண்டிய நாட்டுச் சதிகாரர்களின் நோக்கம் நிறைவேறியிருந்தாலும் இருக்கலாம்.''

''ஆ! தாங்கள்கூட அவ்விதமே சொல்கிறீர்களே! அப்படியானால் நான் கேள்விப்பட்டது உண்மையாகத்தான் இருக்க வேண்டும்!''

''என்ன கேள்விப்பட்டாய்?''

''சக்கரவர்த்திக்கு விரோதமாக ஒரு சதி நடக்கிறதென்றும், சக்கரவர்த்தியின் திருக் குமாரர்களுக்கு விரோதமாக இன்னொரு சதி நடக்கிறதென்றும் கேள்விப்பட்டேன்.''

சின்னப் பழுவேட்டரையர் தம் வஜ்ரப் பற்களினால் உதட்டைக் கடித்துக் கொண்டார். இந்தச் சிறு அறியாப் பையனுடன் பேச்சுக் கொடுத்ததில் தமக்கே இத்தனை நேரமும் தோல்வி என்பதை உணர்ந்தார். ஏறக்குறைய அவனுடைய குற்றச் சாட்டுகளுக்குத் தாம் பதில் சொல்லிச் சமாளிக்கும் நிலைமைக்கு வந்து விட்டது! எனவே, பேச்சை அத்துடன் வெட்டி விட விரும்பினார்.

''உனக்கென்ன ? அதைப் பற்றிக் கவலை? எல்லாச் சதிகளையும் உடைத்துச் சோழ குலத்தைப் பாதுகாக்க நாங்கள் இருக்கிறோம். உன்னுடைய கோரிக்கையைச் சொல்லு. உன் பழைய ஆடைகள் உனக்கு வேண்டும்; அவ்வளவுதானே !'' என்றார்.

''என் பழைய ஆடைகளும் வேண்டும்; அவற்றுக்குள் இருந்த பொருள்களும் வேண்டும்.''

''என்ன பொருள்கள் என்று இன்னமும் நீ சொல்லவில்லையே !''

''சொல்லத்தான் வேண்டுமானால் சொல்லுகிறேன். அதன் பொறுப்பு தங்களைச் சார்ந்தது. இளவரசர் சக்கரவர்த்திக்குக் கொடுத்திருந்த ஓலையைத் தவிர இன்னொரு ஓலையும் என்னிடம் கொடுத்திருந்தார்....''

''இன்னொரு ஓலையா ! யாருக்கு? நீ சொல்லவே இல்லையே !''

''அந்தரங்கமானபடியால் சொல்லவில்லை; நீங்கள் இப்போது வற்புறுத்துகிறபடியால் சொல்லுகிறேன். பழையாறையிலுள்ள இளைய பிராட்டி குந்தவை தேவிக்கு இளவரசர் ஓலை ஒன்று கொடுத்தார்!....''

''ஓஹோ! அப்படியானால், நாளைக்குச் சக்கரவர்த்தி கொடுக்கும் திருமுகத்தை நீ உடனே எடுத்துக் கொண்டு காஞ்சிக்குப் போக முடியாது. இளையபிராட்டிக்கு இளவரசர் ஓலை அனுப்பும்படி இப்போது என்ன அவசரம் நேர்ந்ததோ?''

''தளபதி ! நான் பிறருக்கு எழுதப்படும் ஓலையைப் படிப்பதில்லை. சக்கரவர்த்தியின் ஓலையைப் படித்தது போல் இதையும் நீங்கள் படிப்பதில் எனக்கு ஒன்றும் ஆட்சேபம் கிடையாது. அந்தப் பொறுப்பு தங்களுடையது. என் உடையிலிருந்த பொன்னும் ஓலையும் களவு போகாமல் என்னிடம் திரும்பி வந்தால் போதும்.''

''அதைப் பற்றிப் பயம் வேண்டாம். நானே பார்த்து எடுத்து வருகிறேன்'' என்று சின்னப் பழுவேட்டரையர் நடந்தார். அவர் பின்னோடு வந்தியத்தேவனும் தொடர்ந்தான். அதை யறிந்த கோட்டைத் தளபதி கண்களினால் சமிக்ஞை செய்யவே ஐந்தாறு வேல் பிடித்த வீரர்கள் வந்து வாசற்படியண்டை குறுக்கே நின்றார்கள். அவர்களுடன் சண்டை பிடிப்பதில் அனுகூலம் ஒன்றுமில்லையென்று கருதி வந்தியத்தேவன் அங்கேயே நின்றான்.

சற்று நேரத்துக்கெல்லாம் சின்னப் பழுவேட்டரையர் திரும்பி வந்தார். அவருக்குப் பின்னால் ஒருவன் ஒரு தட்டில் சீர் வரிசை ஏந்திக் கொண்டு வருவது போல் வந்தியத்தேவனுடைய பழைய ஆடைகளை எடுத்து வந்தான்.

''தம்பி ! இதோ உன் ஆடைகள் பத்திரமாயிருக்கின்றன. நன்றாகச் சோதனை செய்து பார்த்துக் கொள்!'' என்றார் கோட்டைத் தளபதி.

அவ்விதமே வந்தியத் தேவன் சோதனை செய்து பார்த்தான். அரைச் சுற்றுச் சுருளில் அவன் வைத்திருந்ததைக் காட்டிலும் அதிகமாகப் பொற்காசுகள் இருந்தன. குந்தவை தேவியிடம் சேர்ப்பிக்க வேண்டிய ஓலையும் இருந்தது. அதிக பொற் காசுகள்



எப்படி வந்தன? முதலில் அவன் தேடிப் பார்த்த போது இல்லாத ஓலை இப்போது எப்படி வந்தது? சின்னப் பழுவேட்டரையரிடம் அது அகப்பட்டிருக்க வேண்டும். அதைப் பார்த்து விட்டு இப்போது திரும்பி வந்த பிறகு அவர் அந்த ஓலையைத் திரும்பச் செருகியிருக்க வேண்டும்! எதற்காக இப்படிச் செய்திருக்கிறார்? பொற்காசுகள் எதற்காக அதிகம் வைத்திருக்கிறார்? பொல்லாத மனிதர் இவர்! இன்னும் எப்படியெல்லாம் தன்னைச் சோதிக்கப் போகிறாரோ, தெரியாது! இவரிடம் சர்வ ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். ஏமாந்து போகக் கூடாது!

"எல்லாம் சரியா யிருக்கிறதா, தம்பி! நீ கொண்டு வந்த பொன், பொருள் எல்லாம்?" என்று சின்னப் பழுவேட்டரையர் கேட்டார். "இதோ பார்த்துச் சொல்லுகிறேன்." என்று கூறி வந்தியத் தேவன் பொற்காசுகளை எண்ணினான். அதிகப்படிக் காசுகளை எடுத்துத் தனியாகப் பழுவேட்டரையர் முன்பு வைத்து விட்டு, "தளபதி! வாணர் குலத்தில் பிறந்தவன் நான்; ஆதித்த கரிகாலரின் தூதன்; பிறர் பொருளுக்கு ஆசைப் படுவதில்லை!" என்றான்.

"உன்னுடைய நேர்மையை மிக மெச்சுகிறேன். ஆயினும் உன்னுடைய வழிச் செலவுக்கு இதை நீ வைத்துக் கொள்ளலாம்! எப்போது புறப்பட விரும்புகிறாய்? இன்றைக்கே புறப்படுகிறாயா? அல்லது இன்றிரவு தங்கி இளைப்பாறி விட்டு, பெரியவரையும் பார்த்துவிட்டுப் போகிறாயா?" என்று கேட்டார் தளபதி.

"அவசியம் இன்றிரவு இங்கே தங்கிப் பெரிய பழுவேட்டரையரையும் தரிசித்து விட்டுத்தான் போக எண்ணியிருக்கிறேன். ஆனால் உங்கள் ஆட்களிடம் மட்டும் கொஞ்சம் சொல்லி வையுங்கள்; என் பொருள்களில் கை வைக்க வேண்டாம் என்று!" — இவ்விதம் சொல்லிக் கொண்டே அதிகப்படியாயிருந்த பொற் காசுகளையும் வந்தியத் தேவன் எடுத்துத் துணிச் சுருளில் பத்திரப் படுத்திக் கொண்டான்.

"மிக்க சந்தோஷம். உனக்கு இங்கே எந்த விதமான இடைஞ்சல்களும் இனி மேல் இராது. உனக்கு என்ன வேண்டுமோ, தாராளமாய்க் கேட்டுப் பெற்றுக் கொள்ளலாம்."

"தளபதி! இந்தத் தஞ்சை நகரைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆசையா யிருக்கிறது. பார்க்கலாம் அல்லவா?"

"தாராளமாகப் பார்க்கலாம். இதோ இவர்கள் இருவரும் உன்னோடு வந்து கோட்டைக்குள் எல்லா இடங்களையும் காட்டுவார்கள். கோட்டைக்கு வெளியில் மட்டும் போக வேண்டாம். சாயங்காலம் கோட்டைக் கதவுகளைச் சாத்தி விடுவார்கள்! வெளியில் போய் விட்டால் இரவு திரும்பி வர முடியாது. கோட்டைக்குள்ளே உன் விருப்பப்படி சுற்றி அலையலாம்!" — இவ்விதம் கூறி விட்டு இரண்டு புதிய ஆட்களைச் சின்னப் பழுவேட்டரையர் தம் அருகில் அழைத்து அவர்களிடம் மெதுவாக ஏதோ சொன்னார். அவர் சொன்னது என்னவாயிருக்கும் என்று வந்தியத்தேவன் ஒருவாறு ஊகித்துத் தெரிந்து கொண்டான்.

## முப்பத்துமூன்றும் அத்தியாயம்

# மரத்தில் ஒரு மங்கை

கோட்டைத் தளபதியின் இரு ஆட்களும் தன் இரண்டு பக்கத்தில் வர, வந்தியத்தேவன் தஞ்சைக் கோட்டையைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டான். தான் தப்பித்து ஓடிவிடாமல் பார்த்துக் கொள்ளவே அவர்கள் தன்னுடன் வருகிறார்கள் என்பதைப் பற்றி அவனுக்குச் சந்தேகம் இருக்கவில்லை. கோட்டை வாசல் வழியாக வெளியே யாரையும் போக விடாமல் பார்த்துக் கொள்ளும்படி கட்டளை பிறந்திருக்கும் என்பதிலும் ஐயமில்லை. ஆனாலும் அவன் அன்று முன்னிரவுக்குள் தப்பித்துச் சென்றே தீர வேண்டும். பெரிய பழுவேட்டரையர் வந்துவிட்டால், பிறகு தப்பிச் செல்வது இயலாத காரியம்; உயிர் பிழைத்திருப்பதே முடியாத காரியமாகிவிடும்!

ஆகவே, தஞ்சாவூர்க் கோட்டைக்குள் வந்தியத்தேவன் அங்குமிங்கும் அலைந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த போது அவனுடைய மனம் தப்பிச் செல்லும் வழிகளைப் பற்றி ஆலோசித்துக் கொண்டே யிருந்தது. முதலில் இந்த யம கிங்கரர்களிடமிருந்து தப்ப வேண்டும்; பின்னர்,

கோட்டையிலிருந்து தப்பிச் செல்ல வேண்டும். எப்படித் தப்புவது? அது தான் தெரியவில்லை.

பார்க்கப் போனால் இவர்களிடமிருந்து தப்புவது பெரிய காரியமில்லை. இரண்டு பேரையும் ஒரு விநாடி நேரத்தில் தாக்கிக் கீழே தள்ளி விட்டு ஓடி விடலாம். ஆனால் எங்கே ஓடுவது? தஞ்சைக் கோட்டையைப் பழுவேட்டரையர்கள் எவ்வளவு பலப்படுத்திக் கட்டியிருக்கிறார்கள் என்பது நாடறிந்த செய்தி. அவர்களுடைய அநுமதியின்றித் தஞ்சைக் கோட்டைக்குள் காற்றுக்கூட நுழைய முடியாது என்று ஜனங்கள் சொல்லுவார்கள். யமனும் வர முடியாது என்று சக்கரவர்த்தியே இன்று காலையில் சொன்னார். அத்தகைய கோட்டையிலிருந்து எப்படிச் செல்வது? இந்த இருவரையும் தொட வேண்டியதுதான்; அவர்கள் உடனே கூச்சல் கிளப்பி விடுவார்கள். அடுத்த கணத்தில் தான் பாதாளச் சிறைக்குப் போக நேரிடும். அல்லது உயிரிழக்க நேரிடும். இவர்களைத் தாக்குவதில் பயனில்லை; தாக்காமல் தந்திரத்தினாலேயே தப்பிக்க வேண்டும். அப்படித் தப்பித்த பிறகு கோட்டையிலிருந்து வெளியேற வழி தேடவேண்டும். எவ்வளவு பலமான கோட்டையாயிருந்தாலும் இரகசியச் சுரங்க வழி இல்லாமல் போகாது. அதை எப்படிக் கண்டு பிடிப்பது? அது யாருக்குத் தெரிந்திருக்கும்? தெரிந்தவர்கள் யாரேனும் இருந்தாலும், தனக்குச் சொல்வார்களா?

இப்படிப் பலவகையாகச் சிந்தித்துக் கொண்டே நடந்த போது, சட்டென்று பழுவூர் இளையராணியின் நினைவு வந்தது. ஆகா! அந்தக் கோட்டைக்குள் யாராவது தனக்கு உதவி செய்வதாயிருந்தால், அந்த மாதரசிதான் செய்யக்கூடும். அதுவும் சந்தேகந்தான். ஆனால் ஆழ்வார்க்கடியானின் பெயரைச் சொல்லி ஏதேனும் தந்திர மந்திரம் செய்து பார்க்கலாம். அப்படிப் பார்ப்பதற்கு முதலில் பெரிய பழுவேட்டரையரின் அரண்மனையைக் கண்டு பிடிக்கவேண்டும். கண்டு பிடித்தாலும், தான் அங்கே ராணியைப் பார்க்கச் செல்வது இந்தத் தடியர்களுக்குத் தெரியக்கூடாது. தெரிந்தால் இவர்கள் போய்ச் சின்னப் பழுவேட்டரையரிடம் சொல்லி விடுவார்கள், அதிலிருந்து என்ன விபரீதம் நேருமோ யார் கண்டது? ஒருவேளை, பெரிய பழுவேட்டரையர் அரண்மனையில் இருக்கும்போது அவரே வந்துவிட்டால் என்ன செய்வது? சிங்கத்தின் குகைக்குள் நாமாகச் சென்று தலையைக் கொடுப்பது போல ஆகுமே?

**வ**ந்தியத் தேவனுடைய மனம் சிந்தித்துக் கொண்டிருந்த போது அவனுடைய வாயும் கண்களும் சும்மா இருந்து விடவில்லை. பின்னோடு வந்தவர்களை, "அது என்ன? இது என்ன?" "அது யார் அரண்மனை?" "இது யார் மாளிகை?" "இது என்ன கட்டடம்?" "இது என்ன கோபுரம்?" என்றெல்லாம் அவன் வாய் கேட்டுக் கொண்டேயிருந்தது. அவனுடைய காதுகள், "இது பெரிய பழுவேட்டரையர் அரண்மனை" அல்லது "பழுவூர் இளையராணி அரண்மனை" என்ற மறுமொழி வருகிறதா என்று



கூர்ந்து கவனித்துக் கொண்டேயிருந்தன. அவனுடைய கண்களோ அப்புறமும் இப்புறமும் நாலாபுறமும் கவனமாகப் பார்த்துக் கொண்டு வந்தன. அப்படிப் பார்த்து வந்த போது ஒரு விஷயம் அவன் கண்கள் வழியாக மனத்தில் நன்கு பதிந்தது. கோட்டைக்குள்ளே பிரதான வீதிகள் விசாலமாயும் ஜனப்போக்கு வரவு நிறைந்ததாயும் இருந்த போதிலும் சந்து பொந்துகளும் ஏராளமாயிருந்தன. மரமடர்ந்த தோட்டங்களும் அதிகமாயிருந்தன. அந்தச் சந்து பொந்துகளின் வழியாகச் சென்று அடர்ந்த தோட்டங்களுக்குள் புகுந்து

மறைந்து கொள்வது அசாத்தியமான காரியம் அல்ல. ஒரு நாள், இரண்டு நாள்கூடத் தலை மறைவாக இருப்பது சாத்தியந்தான். ஆனால் யாரும் பாராத சமயத்தில் மறைந்து கொள்ள வேண்டும்; யாரும் தேடாமலும் இருக்க வேண்டும். சின்னப் பழுவேட்டரையர் அவருடைய கணக்கற்ற ஆட்களைத் தேடுவதற்கு ஏவி விட்டால் மறைந்திருப்பது சாத்தியமல்ல. அல்லது யாருடைய வீட்டுக்குள்ளாவது புகுந்து அடைக்கலம் பெற வேண்டும். அம்மா நிரி தஞ்சைக் கோட்டைக்குள் தனக்கு அடைக்கலம் யார் கொடுப்பார்கள்? பழுவூர் ராணி கொடுத்தால்தான் கொடுத்தது. தன்னுடைய கற்பனா சக்தியையெல்லாம் பிரயோகித்து அவளிடம் கதை கட்டிச் சொல்லி நம்பும்படி செய்ய வேண்டும். அதற்கு முதலில், இவர்களிடமிருந்து தப்பித்து நழுவ வேண்டும்....

ஆகா! இது என்ன கோஷம்? இது என்ன ஆர்ப்பாட்டம்?—ஓ! இவ்வளவு கூட்டமாகப் போகிறார்களே, இவர்கள் யார்? தெய்வமே! நீ என் பக்கத்தில் இருக்கிறாய் என்பதில் சந்தேகமில்லை. இதோ ஒரு வழி புலப்படுகிறது! இதோ ஒரு துணை தோன்றுகிறது!...

குறுக்கு வீதியில் ஒரு திருப்பத்துக்கு வந்ததும், பிரதான வீதி வழியாக ஒரு பெரிய கும்பல் வாத்திய கோஷ ஜய கோஷ முழக்கங்களுடன் போய்க் கொண்டிருந்ததைப் பார்த்து வந்தியத் தேவன் மேற்கண்டவாறு நினைத்தான். அந்தக் கும்பலில் சென்றவர்கள் வேளக்காரப் படையினர் என்பதைத் தெரிந்துகொண்டான். வழக்கம் போல் மகாராஜாவைத் தரிசனம் செய்து விட்டு அவர்கள் கோட்டையை விட்டு வெளியேறுகின்றார்கள் போலும்! இந்தக் கூட்டத்தில் தானும் கலந்து விட்டால்?.... ஆகா! தப்புவதற்கு இதைக் காட்டிலும் வேறு சிறந்த உபாயம் என்ன?

பின்னோடு வருகிறவர்கள் அவ்வளவு சுலபத்தில் தன்னை விட்டுவிட மாட்டார்கள். தான் கூட்டத்தில் கலந்தால் அவர்களும் கூடத் தொடர்ந்து வருவார்கள். கோட்டை வாசல் வழியாக வெளியேறுவதும் எளிதாயிராது! வாசற் காவல் செய்வோர் அவ்வளவு ஏமாந்தவர்களாக இருந்து விடுவார்களா? தன்னைக் கண்டு பிடித்துத் தடுத்து நிறுத்திவிட மாட்டார்களா?.... ஆயினும் ஒரு பிரயத்தனம் செய்து பார்க்க வேண்டியதுதான். வேறு வழியில்லை. கடவுளே பார்த்துக் காட்டியிருக்கும் இந்த வழியை உபயோகித்துக் கொள்ளாவிட்டால் தன்னைப் போன்ற மூடன் வேறு யாரும் இல்லை.

வழக்கம் போல், பின்னோடு வந்தவர்களைப் பார்த்து, "இது என்ன கூட்டம்?" என்று வந்தியத் தேவன் கேட்டான். "வேளக்காரப் படை" என்று சொன்னதும், அந்தப் படையைப் பற்றிய விவரங்களைக் கேட்கலானான். அத்தகைய வீரப் படையில் தானும் சேர்ந்துவிட விரும்புவதாகவும், ஆகையால் நெருங்கிப் பார்க்க வேண்டுமென்றும் சொன்னான். இப்படியெல்லாம் பேசிக் கொண்டே வேளக்காரப் படையை அணுகினான். சிறிது நேரத்தில் "முன்னால் தாரை தப்பட்டை முழக்குகிறவர்களைப் பார்க்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே வேளக்காரப் படைக் கூட்டத்தில் கலந்து விட்டான்.

கூட்டம் மேலே போகப் போக, இவனும் ஒரே இடத்தில் நில்லாமல் மேலும் கீழும் அப்பாலும் இப்பாலும் நகர்ந்து கொண்டிருந்தான். வேளக்காரப்படை வீரர்களைக் காட்டிலும் அதிக உற்சாகத்துடன் கோஷங்களைச் செய்தான். அவ்வீரர்களில் சிலர் இவனை உற்று உற்றுப் பார்த்தார்கள். "இவன் யார் பைத்தியக்காரன்?" என்ற பாவனையில் சிலர் பார்த்தார்கள். "மிதமிஞ்சி மதுபானம் செய்தவன் போலிருக்கிறது!" என்ற பாவனையில் சிலர் பார்த்தார்கள். ஆனால் யாரும் அவனைத் தடுக்கவோ, அப்புறப்படுத்தவோ முயலவில்லை.

அவனுடன் வந்த சின்னப் பழுவேட்டரையரின் ஆட்களோ, வேளக்காரப் படைக்குள் நுழையத் துணியவில்லை. "எப்படியும் அவன் வெளியில் வருவான், அப்போது மீண்டும் பற்றிக் கொள்ளலாம்" என்ற நம்பிக்கையுடன் வேளக்காரப் படையின் ஓரமாகச் சற்று விலகியே அவர்கள் சென்று கொண்டிருந்தார்கள்.

அச்சமயம் வீதியில் எதிர்ப்புறமாகத் தயிர்க் கூடையுடன் வந்து கொண்டிருந்த ஒரு ஸ்திரீ வேளக்காரப் படைக்கு ஒதுங்கி ஒரு சந்தில் நின்றாள். அந்த வீரர்களில் ஒருவன், "அம்மா! தாகமாயிருக்கிறது; கொஞ்சம் தயிர் தருகிறாயா?" என்று கேட்டான். அந்தப் பெண் துடுக்காக, "தயிர் இல்லை; கன்னத்தில் இரண்டு அறை வேணுமானால் தருகிறேன்!" என்றாள்.

அதைக் கேட்ட ஒரு வீரன், "ஓகோ! அதைத்தான் கொடுத்து விட்டுப் போ!" என்று அந்தப் பெண்ணை அணுகிச் சென்றான். தயிர்க்

காரப் பெண் பயந்து ஓடினாள். வீரன் அவளைத் தொடர்ந்து ஓடினான். அவளைப் பிடித்துக் கொண்டு வருவதற்காக இன்னும் இரண்டு வீரர்கள் ஓடினார்கள். ஓடியவர்கள் அனைவரும் தலைக்குத் தலை ஒவ்வொரு விதமாகக் கூச்சல் போட்டுக் கொண்டு ஓடியபடியால் விஷயம் என்னவென்பதே யாருக்கும் தெரியவில்லை. ஏதோ தமாஷ் என்று மட்டும் எல்லாரும் எண்ணினார்கள்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான் வல்லவரையன். அந்த ஒரு கணத்தில் அவன் மனத்திற்குள் தீர்மானத்துக்கு வந்து விட்டான். தீர்மானிப்பதும் தீர்மானத்தைக் காரியத்தில் நிறைவேற்றுவதும் வந்தியத்தேவனுக்கு ஒன்றுதான் என்பதை நாம் ஏற்கனவே பல முறை பார்த்திருக்கிறோம். தீர்மானித்த பிறகு தயங்குவதென்பது அவனுடைய இயற்கைக்கு விரோதமானது. எனவே, ''ஓடு! ஓடு!'' ''பிடி! பிடி!'' என்று கூவிக் கொண்டே வந்தியத்தேவனும், தயிர்க்காரப் பெண்ணைத் துரத்திக் கொண்டு ஓடியவர்களைத் தொடர்ந்து தானும் ஓடினான். அந்தப் பெண் சற்றுத் தூரம் ஓடி ஒரு குறுகிய சந்தில் திரும்பினாள். பின்தொடர்ந்து ஓடியவர்கள் அங்கே போய்ப் பார்த்த போது தயிர்க்காரப் பெண்ணைக் காணவில்லை. மாயமாய் மறைந்து விட்டாள்! துரத்தி வந்த வீரர்களும் அவளைப் பற்றி அப்புறம் கவலைப்படவில்லை; திரும்பி விட்டார்கள். வந்தியத்தேவன் மட்டும் திரும்பவில்லை. அந்தப் பெண் புகுந்து சென்ற சந்து வழியாகவே மேலும் ஓடினான். இன்னும் இரண்டு மூன்று சந்துகள் புகுந்து திரும்பிய பிறகே ஓட்டத்தை நிறுத்தி மெதுவாக நடக்கலுற்றான்.

**வே**ளக்காரப் படை சாதாரணமாகக் கோட்டையிலிருந்து வெளியேறும் நேரம் சூரியாஸ்தமன நேரம் அல்லவா? வந்தியத்தேவன் இப்போது புகுந்து சென்ற சந்துகளில் ஏற்கனவே இருள் சூழ்ந்து விட்டது. இருபுறமும் சில இடங்களில் மதிள் சுவராயிருந்தது. சில இடங்களில் செடி கொடிகள் அடர்ந்த வேலியாயிருந்தது. வந்தியத்தேவன் எங்கும் நிற்காமல் போய்க் கொண்டேயிருந்தான். திசையைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. பெரிய வீதிகளில் புகாமல் சந்து பொந்துகளின் வழியாகப் புகுந்து போனால் எப்படியும் கோட்டை வெளிச் சுவரை அடைந்தே தீர வேண்டும். கோட்டைச் சுவரை அடைந்த பிறகு என்ன செய்வது என்பதைப் பிறகு தீர்மானித்துக் கொள்ளலாம். யோசித்து யுக்திகள் கண்டு பிடிப்பதற்குத்தான் இரவெல்லாம் நேரம் இருக்கிறதே!

சற்று நேரத்துக்கெல்லாம் நன்றாக இருட்டிவிட்டது. அவன் சென்ற பாதை கடைசியில் ஒரு மதிள் சுவரில் வந்து முடிந்தது. இருட்டில் நடந்து வந்த வந்தியத்தேவன் அச்சுவரின் மேல் இலேசாக மோதிக் கொண்டான். சுவர் என்று மட்டும் தெரிந்தது. அது என்ன சுவர், எவ்வளவு உயரமான சுவர் என்பது ஒன்றும் தெரியவில்லை. அநேகமாக அது கோட்டை மதிள் சுவராகவே இருக்கலாம். அப்படியானால் இங்கேயே உட்கார்ந்து விடுவதுதான் சரி. சிறிது நேரத்துக்கெல்லாம் சந்திரன் உதயம் ஆகும். அப்போது பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். அது வரை ஒளிந்திருப்பதற்கு இதைக் காட்டிலும் நல்ல இடம் இருக்க முடியாது. இத்தனை நேரம் சின்னப் பழுவேட்டரையரின் ஆட்கள் திரும்பிப் போய்ச் சொல்லியிருப்பார்கள். கோட்டைத் தளபதி தன்னுடைய ஆட்களை நாலாபுறமும் ஏவியிருப்பார். ஒரு வேளை வேளக்காரப் படையுடன் தான் வெளியேறியிருக்கலாம் என்றும் சந்தேகித்



இருப்பார். கோட்டைக்கு உள்ளேயும் வெளியிலேயும் தன்னைத் தேடிக் கொண்டிருப்பார்கள். தேடட்டும்; தேடட்டும்; நன்ருய்த் தேடட்டும். அவர்களை யெல்லாம் ஏமாற்றி விட்டு நான் இக்கோட்டையை விட்டுத் தப்பித்துச் செல்லா விட்டால் நான் வாணர் குலத்தவன் அல்ல! என் பெயரும் வந்தியத்தேவன் அல்ல!

ஆனல் சந்திரன் உதயமாகி நிலா அடிக்கத் தொடங்கி விட்டால் பழுவேட்டரையர் ஆள்களுக்கும் வசதியாகப் போய்விடும். தன்னைத் தேடி இங்கே வந்தாலும் வந்துவிடுவார்கள். வந்தால் வரட்டும்; தாராளமாய் வரட்டும்; இந்த அடர்ந்த தோப்புகளுக்குள் ஒளிந்து கொண்டால் யார்தான் தேடிக் கண்டு பிடிக்க முடியும்?....

இப்படி எண்ணிக் கொண்டே சுவரின் மீது சாய்ந்து கொண்டு, வந்தியத் தேவன் உட்கார்ந்தான். இளம் பிள்ளையாதலாலும், பகலெல்லாம் அலேந்து களைத்திருந்தபடியாலும் கண்ணைச் சுழற்றிக் கொண்டு தூக்கம் வந்தது. மேலக்காற்றில் மரக் கிளைகள் ஆடி ஒன்றேடொன்று உராய்ந்து உண்டாக்கிய சத்தம் தாலாட்டுப் பாடலைப்போல் மயக்கத்தை உண்டு பண்ணியது. அப்படியே தூங்கி விட்டான்.

அவன் தூக்கம் நீங்கிக் கண் விழித்த போது சந்திரன் உதயமாகிக் கீழ் வானத்தில் சிறிது தூரம் மேலே வந்



இருந்தது. அடர்ந்த மரக் கிளைகளின் வழியாக நிலா வெளிச்சம் வந்து சுற்றுப்புறக் காட்சிகளை அரைகுறையாக அவனுக்குக் காட்டியது. தனது நிலை என்னவென்பதை வந்தியத்தேவன் ஞாபகப் படுத்திக் கொண்டான். சுவரில் சாய்ந்தபடி தான் தூங்கி விட்டது அவனுக்கு வியப்பை அளித்தது. அதைக் காட்டிலும் துயில் நீங்கி விழித்துக் கொண்டது ஆச்சரியம் அளித்தது. தன்னுடைய துயிலை நீக்கி விழிக்கச் செய்த காரணம் யாது? ஏதோ ஒரு குரல் கேட்டது போல் தோன்றியதே? அது மனிதக் குரலா? அல்லது விலங்கின் குரலா? அல்லது இரவில் விழித்திருக்கும் பறவையின் குரலா? — குரல் கேட்டது தான் உண்மையா?

வந்தியத்தேவன் அண்ணாந்து பார்த்தான். அரைகுறையான நிலா வெளிச்சத்தில் செங்குத்தான சுவர் தெரிந்தது. ஆ! இது கோட்டைச் சுவரா யிருக்க முடியாது. கோட்டைச் சுவர் இன்னும் உயரமாயிருக்கும். ஒரு வேளை வெளிக் கோட்டைச் சுவருக்குள்ளே இன்னொரு சிறிய கோட்டைச் சுவராக இருக்குமோ? அல்லது பெரியதோர் அரண்மனைத் தோட்டத்தின் மதிள் சுவரோ?

அண்ணாந்து பார்த்துக் கொண்டே வந்தியத்தேவன் எழுந்தான். ஒரு கணம் அவனுடைய இருதயத் துடிப்பு நின்று போயிற்று. வயிற்றிலுள்ள குடல் மேலே மார்பு வரை விம்மி வந்து அடைத்தது. அவ்வளவு பீதி உண்டாயிற்று. அதோ அந்த மதிள் சுவருக்கு மேலேயுள்ள மரக் கிளையில் இருப்பது என்ன? மரங்களில் வசிக்கும் வேதாளம் என்னும் பிசாசைப் பற்றி அவன் கேட்டிருந்த கதைகள் பலவும் நினைவுக்கு வந்தன.

ஆனால் வேதாளம் பேசுமா? மனிதக் குரலில் பேசுமா? அதுவும் பெண்ணின் குரலில் பேசுமா? இந்த வேதாளம் அவ்வாறு பேசுகிறதே? என்ன சொல்கிறது என்று கேட்கலாம்.

"என்ன ஐயா! சுவரில் சாய்ந்தபடி தூங்கிவிட்டாயா? எத்தனை தடவை கூப்பிடுகிறது?"

ஆ! இது வேதாளம் அல்ல. மனித குலத்துப் பெண்மணிதான் பேசுகிறாள். மரக் கிளையின் மீது உட்கார்ந்திருப்பவள் ஒரு பெண்மணிதான்! இது என்ன கனவா? அல்லது உண்மையில் நடப்பதா?

"அழகுதான்! இன்னும் தூக்கம் கலையவில்லை போலிருக்கிறது. இதோ ஏணியை வைக்கிறேன். ஜாக்கிரதையாக ஏறி வா! கீழே விழுந்து தொலைக்காதே!"

இப்படிச் சொல்லிக் கொண்டே அப்பெண் சுவரின் உட்புறத்திலிருந்து மெல்லிய மூங்கிலினால் ஆன ஏணி ஒன்றை எடுத்து வெளிப்புறத்தில் சுவர் ஓரமாக வைத்தாள்.

வந்தியத் தேவனுக்கு ஒன்றும் விளங்கவில்லைதான்! ஆனாலும் இப்படிப்பட்ட அரிய சந்தர்ப்



பத்தை — தன்னைத் தேடி வரும் சந்தர்ப்பத்தை அவன் விட்டு விடுவானா?

வருகிறது வரட்டும்; பிறகு நடப்பது நடக்கட்டும். இப்போது இந்த ஏணியில் ஏறலாம்; சுவரின் உச்சியை அடைந்த பிறகு மற்ற விவரங்கள் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.

ஏணியில் முக்கால் பங்கு அவன் ஏறியபோது அந்தப் பெண் மறுபடியும், ''நல்ல தாமதக்காரன் நீ! அங்கே இளைய ராணியம்மாள் காத்துக் கொண்டிருக்கிறார்கள்! இங்கே நீ மதில் சுவரில் சாய்ந்து தூங்கிக் கொண்டிருக்கிறாய்!'' என்றாள். அப்போது ஏற்பட்ட அதிர்ச்சியினால் வந்தியத்தேவன் ஏணியிலிருந்து நழுவி விழுந்துவிட இருந்தான். நல்ல வேளையாக, அங்கே சுவரில் நீட்டிக் கொண்டிருந்த கல்லைப் பிடித்துக் கொண்டு சமாளித்தான்.

இளைய ராணி என்றால், பழுவூர் இளையராணியாகத்தான் இருக்கும்? தான் இங்கே வந்து உட்கார்ந்திருப்பது அவளுக்கு எப்படித் தெரிந்தது? மாய மந்திரம் ஏதோ அவள் அறிந்திருக்க வேண்டும்! தன்னைப் பார்ப்பதில் அவளுக்கு இவ்வளவு சிரத்தை ஏற்படக் காரணம் என்ன? ஒரு வேளை, — ஒரு வேளை, — வேறு எவனுக்காகவோ வைத்த ஏணியில் தான் ஏறி விட்டேனோ? எப்படியிருந்தாலும் இருக்கட்டும்! முன் வைத்த காலைப் பின் வைக்க முடியாது! எல்லாம் சற்று நேரத்தில் தெரிந்து போய் விடுகிறது.

சுவரின் உச்சியருகில் வந்ததும் அவனுடைய கையைப் பிடித்து அந்தப் பெண் தூக்கிவிட்டாள். அப்போது நிலா வெளிச்சம் அவள் முகத்தில் அடித்தது. இதற்குள் ஆச்சரியப்படும் சக்தியையே வந்தியத்தேவன் இழந்து விட்டான். அதனால்தான் அவளுடைய முகம், வேளக்காரப் படையினர் துரத்திய தயிர்க்கூடைக்காரியின் முகம் போலத் தோன்றியும், அவன் சுவரிலிருந்து தவறி விழவில்லை. இன்றிரவு இதற்கு மேல் என்னென்ன வியப்பான நிகழ்ச்சிகள் நடந்தாலும் வியப்படைவதற்கு இடமில்லைதான்.

''ஊம்! ஏன் விழித்துக் கொண்டு சுவர் மேலேயே உட்கார்ந்திருக்கிறாய்? ஏணியை எடுத்து உள்ளே இறக்கி விட்டுக் குதி சீக்கிரம்!'' என்று சொல்லிக் கொண்டே அந்தப் பெண் சரசர வென்று மரக் கிளையிலிருந்து கீழே இறங்கினாள்.

வந்தியத் தேவன் அவள் கூறிய வாறே செய்தான். அவன் இறங்கிய இடம் ஒரு விஸ்தாரமான தோட்டம் என்று தெரிந்தது. சற்றுத் தூரத்தில் ஒரு பெரிய அரண்மனையின் மாடகூட கோபுரங்களும் சிகரங்களும் மங்கிய நிலா வெளிச்சத்தில் சொப்பன உலகக் காட்சியைப் போல் தோன்றின.

அது யாருடைய அரண்மனை என்று கேட்பதற்காக வந்தியத் தேவன் தொண்டையைக் கனைத்துக் கொண்டான். உடனே அந்தப் பெண் ''உஷ்!'' என்று சொல்லி உதட்டில் விரலை வைத்து எச்சரித்துவிட்டு முன்னால் நடந்தாள். வந்தியத்தேவன் அவளைத் தொடர்ந்து சென்றான். **(தொடரும்)**

## சிதைந்த கோபுரம்!

யாத்ரீகர் ஒருவர் ராமேசுவரத்துக்குப் போனார். கடலில் குளிப்பதற்குமுன்பு தம் கையிலிருந்த வெண்கலச் செம்பைப் பத்திரமாக ஓரிடத்தில் வைக்க எண்ணினார். நீண்ட நேரச் சிந்தனைக்குப் பிறகு அவருக்கு ஒரு யோசனை புலப்பட்டது. செம்பை மணலில் ஓரிடத்தில் வைத்தவர் அதன் மீது மணலினால் கோபுரம் போல் கையாலேயே பிடித்து வைத்து செம்பை மூடி, அடையாளத்துக்காக அந்த மணல் சிகரத்தின் மேல் ஒரு பூவை வைத்துவிட்டு நீராடச் சென்றார்.

குளித்துவிட்டுச் சற்று நேரம் கழித்து, செம்பை எடுத்துச் செல்வதற்காக வந்தவருக்கு ஒரே ஆச்சரியம்! அங்கே அவர் கண் முன்னால் கண்டது மணலினால் பிடித்து வைக்கப்பட்ட பல கோபுரங்கள்! எல்லாவற்றின் சிகரத்தின் மீதும் ஒவ்வொரு மலர்! எல்லாம் ஒரே மாதிரித் தோற்றம்! இதில் அவர் போற்றிப் பாதுகாத்த அந்தச் செம்பை எப்படிக் கண்டு பிடிப்பது?

குளிப்பதற்காக வந்த யாத்ரீகர்கள், முதல்முதல் மணல் கோபுரத்தைப் பார்த்தவுடன் அது ஓர் அத்தியாவசியச் சடங்கு என்று நினைத்து ஆளுக்கு ஒன்றாகப் பிடித்து வைத்துவிட்டு குளிக்கப் போய் விட்டனர்.

செம்பைத் தேடும் பணியில் ஈடுபட்ட அவர், ஒவ்வொரு கோபுரத்தையும் கலைக்க ஆரம்பித்தபோது அதைப் பிடித்து வைத்தவர்கள் சண்டைக்கு வர ஆரம்பித்து விட்டார்கள். சிலர் அடிக்கவே வந்து விட்ட



னர். தலைதப்பினால் போதும் என்று, அந்த யாத்ரீகர் செம்பைத் துறந்து திரும்ப வேண்டியதாயிற்று.

—திரு சாண்டில்யன் கூறிய கதையை எழுதி அனுப்பியவர் மயிலை மூர்த்தி.




...உங்களுக்குத் தேவை

**நெரோலாக் பெயின்டுகள்**

காசுபட மெருகு குன்றாமல் மிளிர்கின்றது,
உங்கள் வீட்டிற்கு என்றும் புதுமை மிளிரும் தோற்றத்தைத்
தருவதற்கென தயாரிக்கப்படுகின்றன நெரோலாக்
பெயின்டுகள். எனவே, நெரோலாக் பெயின்டுகள் உயர்ந்த
தரநிர்ணயங்களுக்கேற்ப தயாரிக்கப்பட்டு, கடுமையான
தரக்கட்டுப்பாட்டுச் சோதனைகளுக்குள்ளாகின்றன
என்று சொல்லவும் வேண்டுமா!

இன்றே நெரோலாக் பெயின்டுகளை உபயோகித்துப்
பாருங்கள்—செஞ்சைபன்ரும் பல வர்ணங்களிலிருந்து
தேவையானதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்.

**குட்லாஸ் நெரோலாக் பெயின்ட்ஸ் ஒப்பற்ற தரம் வாய்ந்தவை**

குட்லாஸ் நெரோலாக் பெயின்ட்ஸ் லிமிடெட் த.பெ. 699, டபோர்பஸ் பில்டிங், ஹோம் ஸ்ட்ரீட், பம்பாய்-1.

INTERPUB/GNP/15A TAM

குட்லாஸ் நெரோலாக் பெயின்ட்ஸ் லிமிடெட், 29, பெரியண்ண மேஸ்திரி தெரு, சென்னை-1

# மகாபாரதம்

## ராஜாஜி



விராடன் மகன் உத்தரன் அச்சமயம் யானையின் மேல் ஏறிச் சென்று சல்லியனை எதிர்த்தான். தேர்க் குதிரைகள் நான்கும் யானையால் மிதிபட்டு இறந்தன. இவ்வாறு தாக்கப்பட்ட சல்லியன் சக்தியாயுதத்தை உத்தரன் மேல் வீசி எறிந்தான். அது உத்தரனுடைய கவசத்தைப் பிளந்து உட் சென்றது. அவன் கையில் இருந்த அங்குசமும் தோமரமும் நழுவி விழுந்தன. யானைப் பிடரியினின்று உத்தரன் பிரேதமாகக் கீழே விழுந்தான்.

யானை சல்லியனைத் தாக்கு வதை நிறுத்தவில்லை. சல்லியனும் கத்தியை எடுத்து யானையைத் தாக்கினான். துதிக்கை அறுபட்டு, மர்ம ஸ்தானங்களில் பாணங் களால் அடிபட்டு யானையானது பயங்கரமான சப்தம் போட்டுக் கொண்டு கீழே விழுந்து மரித் தது. பிறகு சல்லியன் கிருதவர்ம னுடைய தேரில் ஏறினான். அப்போது விராடனுடைய புத்திரன் சுவேதன் தம்பி உத்தரன் கொல்லப்பட்டதைக் கண்டு நெய்விட்ட அக்கினியைப் போல் ரௌத்ராகாரமாகத் தன் ரதத்தைச் சல்லியனை நோக்கி ஓட்டி வந்தான். சல் லியன் மிருத்யுவின் வசமாகி விடுவான் என்று ஏழு ரதிகர்கள் அவனைக் காப்பாற் றுவதற்காக மிகவும் விரைவாக வந்து அவனை நாற்புறமும் சூழ்ந்து கொண்டு போர் செய்தார்கள். மேகங்கள் மின்னு வதைப் போல் ஜ்வலிக்கும் வில்கள் சுவேதன் பேரில் அம்பு மழை பொழிந் தன. கௌரவ வீரர்களின் விற்களைச் சுவேதன் தன் பாணங்களினால் அறுத் தான். அவர்கள் ஏழு பேரும் ஏழு சக்திகளைச் சுவேதன் பேரில் வீசினார்கள். அவன் அவற்றை உடனே ஏழு பாணங் களாலே துண்டித்தான். சுவேதன் செய்த யுத்தத்தைக் கண்டு இரு பட் சத்து வீரர்களும் வியந்தார்கள். சல்லி

யனுடைய அபத்தான நிலைமையைக் கண்டு துரியோதனன் ஒரு பெரும் படையை அந்த இடத்துக்குச் செலுத்தினான். அதன் மேல் பயங்கரப் போர் நடந்தது. ஆயிரக் கணக்கில் வீரர்கள் மாண்டார்கள். தேர்கள் உடைந்து வீழ்த்தப்பட்டன. யானைகளும், குதிரைகளும் ஆயிரக் கணக்கில் செத்தன. சுவேதன் துரியோதனனுடைய படையைத் துரத்தி யடித்து பீஷ்மரைத் தாக்கினான். இருவருக்கும் கோரமான யுத்தம் நடந்தது.

பீஷ்மருடைய தேர்க் கொடியைச் சுவேதன் அறுத்துத் தள்ளினான். பீஷ்மர் சுவேதனுடைய



தேர்க் குதிரைகளையும் கொடியையும் சாரதியையும் வீழ்த்தினார். அப்போது சுவேதன் ஒரு சக்தி ஆயுதத்தை எடுத்து பீஷ்மர் மேல் எறிந்தான். அதைப் பீஷ்மர் தம் பாணத்தால் தடுத்து விட்டார்.

அதன் பின் சுவேதன் கதாயுதத்தை எடுத்துச் சுழற்றிப் பீஷ்மருடைய தேரின் மேல் எறிந்தான். தேர் ஒடித்து பொடியாகும் என்று தெரிந்த பீஷ்மர் தேரினின்று கீழே குதித்தார். அந்தக் கணம் கொடி மரத்துடன் தேர் சுக்கு நூறாயிற்று. பிதாமகர் கோபம் மேலிட்டு வேறு தேரின் மீதேறி வில்லை நன்றாக வளைத்து ஓர் அம்பைச் சுவேதன் மீது

செலுத்தினார். விராடன் மகன் சுவேத னும் யமாலயம் சென்றான். துச்சாதனன் வாத்திய கோஷங்களோடு வெற்றிக் கூத்து அடினான். அதன் பிறகு பிதாமகர் பாண்டவ சேனையைத் தாக்கினார்.

முதல் நாள் யுத்தத்தில் பாண்டவ சேனை மிகவும் துன்புறுத்தப்பட்டது. தரும புத்திரன் பயந்தான். துரியோதனனுடைய மகிழ்ச்சியோ கரை புரண்டு ஓடிற்று. பாண்டவர்கள் கிருஷ்ணனிடம் வந்து, ''என்ன செய்வோம்?'' என்று ஏங்கி ஆலோசனை செய்யலானார்கள்.

கிருஷ்ணன் யுதிஷ்டிரனைப் பார்த்து, ''பாரத சிரேஷ்டரே! கவலைப்படாதீர். சூரர்களான தம்பிகளைப் பெற்றிருக்கிறீர். நீர் ஏன் பயப்படுகிறீர்? சாத்யகியும் விராடனும் துருபதனும் திருஷ்டத்யும்னனும் நானும் இருக்க உமக்கு ஏன் விசாரம்? பீஷ்மருடைய மரணத்துக்காகவே சிகண்டி காத்திருப்பதை மறந்தீரா?'' என்று தேற்றினார்.

# 66. இரண்டாம் நாள் யுத்தம்

முதல் நாளில் பாண்டவ சேனை பயத்தினால் பீடிக்கப்பட்டதைக் கண்டு, சேனாதிபதியான திருஷ்டத்யும்னன் கவலைப்பட்டு அடுத்த தினம் தன் சேனையை மிக்கக் கவனத்தோடு வியூகப்படுத்தித் தைரியமும் உற்சாகமும் ஊட்டினான்.

துரியோதனனோ கர்வமடைந்து தன் சேனையின் நடுவில் நின்று கொண்டு, யுத்த வீரர்களைப் பார்த்து, ''கவசம் பூண்ட வீரர்களே! நம்முடைய வெற்றி நிச்சயம். உயிரைப்பொருட்படுத்தாமல் போர் புரியுங்கள்!'' என்று கர்ஜனை செய்தான்.

பீஷ்மரின் தலைமையில் கௌரவப் படை மறுபடியும் பாண்டவ சேனையைப் பலமாகத் தாக்கிற்று. வியூகம் உடைந்து போய்ப் பாண்டவ சேனையில் மறுபடியும் பெரும் நாசம் ஏற்பட்டது.

அருச்சுனன், தன் சாரதியா யிருந்த கிருஷ்ணனைப் பார்த்து, ''நாம் இப்படியே அஜாக்கிரதையாக இருந்தோமானால் பீஷ்மர் நம்முடைய சேனை முழுமையையும் சீக்கிரமே நாசம் செய்து விடுவார். பீஷ்மரை வதம் செய்தாலொழிய நம்முடைய சைன்யம் தப்பாது'' என்றான்.

கிருஷ்ணன், ''தனஞ்சய! இதோ பிதாமகருடைய ரதத்தை அடைவாய். தேரைச் செலுத்துகிறேன். அவரைத் தாக்க அயத்தம் செய்து கொள்'' என்று சொல்லி அருச்சுனனுடைய தேரைப் பீஷ்மர் இருந்த இடத்தை நோக்கிச் செலுத்தினான்.

வேகத்தோடு தம்மை நோக்கி வரும் அருச்சுனனைக் கண்டு பிதாமகர் அவனை பாணங்களால் வரவேற்றார். வீரர்களுக்குள் முதன்மையானவர் என்று உலகம் எங்கும் புகழ் பெற்றிருந்த பீஷ்மர் நன்றாகக் குறி பார்த்துப் பார்த்தன் மேல் பாணங்களை விட்டார். பிதாமகரை எந்தக் காலத்திலும் ஜாக்கிரதையாகப் பாதுகாக்கும்படி சேனைக்குத் துரியோதனன் கட்டளை இட்டிருந்தான். பீஷ்மரைச் சுற்றியிருந்த வீரர்கள் அனைவரும் அருச்சுனனைத் தாக்கினார்கள்.

தனஞ்சயன் அதையெல்லாம் கொஞ்சமும் லட்சியம் செய்யவில்லை. தனஞ்சயனை எதிர்த்துப் போர் செய்யக் கூடியவர்கள் கௌரவ சேனையில் பிதாமகரான பீஷ்மர், துரோணர், கர்ணன் ஆகிய மூன்று பேர்களே; வேறு யாராலும் முடியாது என்பது பிரசித்தி. தன்னைத் தடுத்த வீரர்களின் கூட்டத்தில் அருச்சுனன் பிரவேசித்து மகாரதர்கள் அனைவரையும் பிரமிக்கச் செய்யும்படியான லாகவத்தோடு போர் புரிந்தான். தேர்களிடையில் அவனுடைய தேர் அற்புத முறையில் இங்கும் அங்கும் கண்ணுக்குத் தெரியாமல் சஞ்சாரம் செய்தது. துரியோதனனுடைய இருதயம் அப்போது கலங்கிற்று. பீஷ்மரிடம் வைத்திருந்த நம்பிக்கை குறைய ஆரம்பித்தது.

''கங்கா புத்திரரே! நீரும் துரோணரும் உயிருடன் இருக்கும்பொழுதே இந்த அருச்சுனனும் கிருஷ்ணனும் நம்முடைய சேனை முழுவதையும் நாசம் செய்து விடுவார்கள் போலிருக்கிறது. என்மேல் உண்மையான அன்பை வைத்திருக்கும் கர்ணன் உமக்காக ஆயுதம் எடுக்காமல் இருக்கிறான். நான் ஏமாற்றம் அடைவேன் போலிருக்கிறது. பல்குனனைக்* கொல்லும்படியான வழி நீர் உடனே தேட வேண்டும்'' என்றான்.

பீஷ்மார்ஜுன யுத்தத்தைப் பார்க்க தேவர்களும் கந்தர்வர்களும் வந்துவிட்டார்கள். இருவர் ரதங்களிலும் வெள்ளைக் குதிரைகள் பூட்டியிருந்தன. இரு

*பல்குனன் - அருச்சுனன்

வரும் சம வீரர்களாகவும் போர்த் திறமை காட்டுவதில் மகிழ்ச்சி கொண்டவர்களாகவும் வெகு நேரம் யுத்தம் செய்தார்கள். இரு பட்சத்திலும் பாணங்கள் எண்ணற்ற கணக்கில் விடப்பட்டன. அம்புகள் அம்புகளை வெட்டித் தடுத்தன. சில சமயம் பீஷ்மருடைய பாணங்கள் கிருஷ்ணன் மார்பிலும் பாய்ந்தன. காயங்களிலிருந்து ரத்தம் ஒழுகிப் பச்சை வண்ண மாதவன் மலர் பூத்த பலாச மரம் போல் முன்னை விட அழகாக ஜொலித்தான். மாதவன் காயம் பட்டதைக் கண்டு பார்த்தனுக்கு ஆத்திரம் பொங்கப் பிதாமகரைப் பலமாகத் தாக்கினான்.

ஆயினும் இருவரில் யாரும் ஜெயிக்க முடியாமல் அருச்சுனனும் பீஷ்மரும் வெகு நேரம் அற்புதப் போரை நடத்தினார்கள். இரு ரதங்களும் ஒன்றை ஒன்று தாக்கி இங்குமங்கும் செல்லும் போது இரு தரப்புச் சேனைகளுக்கும் கொடிகளின் அடையாளம் ஒன்றே வித்தியாசம் தெரிந்தது. மற்றபடி எங்கே பீஷ்மர், எங்கே அருச்சுனன் என்று சொல்ல முடியவில்லை.

பிதாமகரும் தனஞ்சயனும் யுத்தம் செய்து குருக்ஷேத்திரத்திலிருந்த வீரர்களையும், வானத்திலிருந்த தேவர்களையும் வியக்கச் செய்து கொண்டிருக்கையில் மற்றொரு புறம் யுத்த களத்தில் துரோணரோடு அவருக்குப் பிறவிப் பகையும் பாஞ்சால ராஜன் மகனும் திரௌபதியின் சகோதரனுமான திருஷ்டத்யும்னன் பெரும் போர் நடத்திக் கொண்டிருந்தான்.

துரோணர் திருஷ்டத்யும்னனைப் பலமாகத் தாக்கிக் காயங்களை உண்டாக்கினார். ஆனால் திருஷ்டத்யும்னன் மனம் கலங்காமல் துவேஷச் சிரிப்புச் சிரித்துக்கொண்டு பாணங்களைப் பொழிந்தான். துரோணரும் அவன் எய்த பாணங்களையும் வீசிய சக்தியையும் கதாயுதத்தையும் வெகு சாமர்த்தியமாகத் தம் அம்புகளால் வெட்டித் துண்டாக்கினார். திருஷ்டத்யும்னனுடைய வில்லைப் பல தடவை துரோணர் அறுத்து வீழ்த்தினார். திருஷ்டத்யும்னனுடைய சாரதியும் வீழ்த்தப்பட்டான். அதன் மேல் கோபம் கொண்டு கதாயுதம் ஒன்றை எடுத்துத் தேரினின்று கீழே குதித்துத் துரோணர் மேல் பாய வந்தான். துரோணர் கதாயுதத்தையும் பாணங்களால் கீழே விழச் செய்தார். பாஞ்சாலன் ஆத்திரம் தாங்காமல் சக்தியை வீசிக் கொண்டு யானை மேல் சிங்கம் பாய்வது போல் துரோணரை நோக்கிச் சென்றான். துரோணர் சரங்களைப் பொழிந்து, அவனைத் தடுத்து நடக்கவும் முடியாத நிலைமையை அவன் எய்தும்படி செய்தார். அந்தச் சமயத்தில் பீமசேனன் திருஷ்டத்யும்னனுடைய நிலைமையைத் தெரிந்து விரைவாக வந்து துரோணர் மேல் பல பாணங்களை விட்டான். அவ்வாறு அவகாசம் செய்து கொண்டு பாஞ்சாலனைத் தன் தேரின்மேல் ஏற்றிக் கொண்டு சென்றான்.

இதைப் பார்த்த துரியோதனன் பீமனைத் தாக்கும்படி கலிங்கச் சேனைக்குக் கட்டளையிட்டான்.

பீமசேனன் தன்னை எதிர்த்த கலிங்கர் படையைச் சின்னா பின்னம் செய்து வெட்டி நாசமாக்கினான். காலனே பீமனைப் போல் உருவம் எடுத்து வந்து கலிங்கரை வதம் செய்கிறான் என்று சேனை முழுவதும் அலறிற்று. கௌரவ சேனை உற்சாகம் அழிந்து பயப்படுவதைப் பார்த்த பீஷ்மர் கலிங்கருடைய உதவிக்கு அந்த இடம் வந்து சேர்ந்தார். பீஷ்மர் தாக்கச் சென்றதை அறிந்து சாத்யகியும் அபிமன்யுவும் மற்றவர்களும் பீஷ்மரைத் தாக்கினார்கள். சாத்யகி விடுத்த ஓர் அம்பு பிதாமகருடைய சாரதியை வீழ்த்திற்று. சாரதி வீழ்ந்ததும் குதிரைகள் பிய்த்துக் கொண்டு எதிர் பாராத வேகத்துடன் யுத்த களத்தை விட்டு ஓடின. இதைப் பார்த்துப் பாண்டவ சைன்யம் குதூகலம் அடைந்து சூட்டோடு சூடாகக் கௌரவ சேனையைப் பலமாகத் தாக்கிற்று.

அருச்சுனன் அன்று காட்டிய பராக்கிரமத்தினால் கௌரவ சேனை மிகவும் சேதமடைந்தது. கௌரவ பட்சத்து வீரர்கள் உற்சாகம் இழந்து சூரியன் எப்போது மறைவான் என்று எதிர் நோக்கிக் கொண்டிருந்தார்கள்.

சூரியன் அஸ்தகிரி அடைந்ததும் பீஷ்மர் துரோணரைப் பார்த்து, ''யுத்தத்தை இப்போது நிறுத்துவதே உசிதம். நம்முடைய சேனையோ களைப்பும் பயமும் அடைந்திருக்கிறது'' என்றார். பாண்டவர் பக்கத்தில் தனஞ்சயன் முதலானோர் நான்கு வித வாத்திய கோஷங்களுடன் வெகு சந்தோஷமாய்த் தங்களுடைய பாசறைகளுக்குத் திரும்பினார்கள். முதல் நாள் யுத்தத்தில் பாண்டவர்கள் பயந்தது போல் இரண்டாவது நாள் முடிவில் கௌரவர்கள் மனக் கலக்கத்தை அடைந்தார்கள்.

**(தொடரும்)**

# எல்லா சோப்புக்களுமே சுத்தமாகக் கழுவுகின்றன...

## ஆனால், மாசற்ற மேனி எழிலைப் பெற தேவைப் படுவது

# ஜி-11 கொண்ட சிந்தால் சோப்பு தான்




சிந்தால் சோப்பிலுள்ள ஜி-11 (ஹெக்ஸாக்குளோரோஃபீன்) சருமக் களங்கங்களை உண்டுபண்ணும் கொடிய கிருமிகளை அழித்து விடுகிறது. நறுமணமளிக்கும் ஜி-11 கொண்ட சிந்தால் சோப், உங்கள் சருமத்திற்கு மழமழப்பையும் காந்தியையும் அளிக்கிறது.

INTERPUB GCS 9A-TAM

இரண்டு பெண்டாட்டிக்காரர் முத்துவேலன் இருவரிடமும் ஆத்மார்த்தமான திருப்தி காணவில்லை. இதனால் வாசகர்கள் முத்துவேலன் மீது கோபம் கொள்ள முடிய வில்லை. அனுதாபமே பிறக்கிறது. தகுந்த காரணங்கள் இருப்பதால். தாமே வளர்த்துக் கொண்ட அறிவுக்கும் ஆற்றலுக்கும் ஏற்ப சமதையான அறிவாற்றல் கொண்ட கருணையை அவர் சந்திக்கும் போது அறிவுபூர்வமான நட்பு அவர்களிடையில் ஏற்படுகிறது. படிப்படியாகக் காதலாய் மலருகிறது. ஏதோ பெரிய குற்றவாளிகளைப் போல பயந்து பயந்து ரகசியமாகச் சந்திப்பது முத்துவேலருக்குப் பிடிக்கவில்லை. சொத்தில் பங்கு கேட்க மூன்றாவது மனுஷி வந்தாளே என்ற ஆதங்கம் தம் குடும்பத்தினர் யாருக்கும் ஏற்படாத வண்ணம் சொத்தைப் பிரித்துக் கொடுத்து விட்டுச் கருணையுடன் வேறு எங்கேயாவது போய் புது வாழ்வு தொடங்க விரும்புகிறார் முத்துவேலன்.

ஆனால் கிளம்ப வேண்டிய சமயத்தில் கருணை வரவில்லை; கடிதம் மட்டுமே வருகிறது. கருணை சமூகத்துக்கு அடிமையாகி விட்டதாக முத்துவேலன் கருதுகிறார். ஆனால் கருணையோ தன் சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்ளவே தான் அவருடன் கிளம்பி வர மறுப்பதாகக் கடிதத்தில் எழுதியுள்ளாள்.



## எழுத்தில் புதுமை



# சமூகம் என்பது நாலு பேர்

இரட்டைப் பெண்டாட்டிக்காரன் கதை தான். மூன்றாவதாக ஒருத்தியையும் மணந்து கொள்ள முயலுகிறவரின் கதை. பல எழுத்தாளர்கள் கையாண்டு புளித்துப் போன கதை. ஆனால் ஜெயகாந்தன் இதே கதையை எழுதும்போது எவ்வளவு புதுப் புது உணர்வுகளை வாசகர்களிடம் தோற்றுவிக்கிறார்! எத்தனை எத்தனை கருத்துக்களை கதையினூடே (உபதேசம் செய்கிற பாணியில் இல்லாமல்) கூறி சிந்திக்க வைக்கிறார்! அதிசயத்தில் ஆழ்ந்துவிடுகிறோம்.

சமூகத்தின் உயிர்நாடி தனிமனிதனின் சுதந்திரம்தான் என்று மனப்பூர்வமாக நம்புகிறார் ஜெயகாந்தன் இந்தக் கதையில். (யாரும் அதிசயப்பட வேண்டாம்; அவரே பேட்டியின் போது கூறிய கருத்துத்தான்.) அந்தத் தனிமனிதன் சுதந்திரம் என்பது வெறும் அரசியல் சொற்பொழிவிலோ அல்லது பார்க்கிலே உட்கார்ந்து கொண்டு தர்க்கம் புரிவதிலோ மட்டுமல்ல; எல்லா விதங்களிலும் — இரண்டு பெண்டாட்டிக்காரனாக இருந்து கொண்டு மூன்றாவதாக ஒருத்தியைக் காதலிப்பதற்குக்கூட — தனிமனிதன் சுதந்திரம் பெற்றிருக்க வேண்டும் என்று கருதுகிறார். ஆனால் இன்றைய நமது சமூகம் தனிமனிதனை அப்படி வாழ விடுகிறதா? இதுதான் அவர் எழுப்பும் கேள்வி. கேள்விக்கு விடை காணவோ, பிரச்னைக்கு முடிவு காணவோ, வெற்றி தோல்வியை நிர்ணயிக்கவோ அவர் முயலவில்லை. இருக்கும் நிலைமையைக் கட்டிக் காட்டிவிட்டுத் திருப்தி அடைந்து விடுகிறார். எந்த முடிவையும் திணிப்பது அவர் நோக்கமல்ல. சொல்லுக்கும் செயலுக்கும் லட்சியத்துக்கும் யதார்த்தத்துக்கும் இடையில் உள்ள வித்தியாசம் எவ்வளவு ஆழமானதுஎன்றுகூறி அத்துடன் விட்டுவிடுகிறார். இதுவேஜெயகாந்தன்பாணி!

இந்தக் கதையைப் பற்றிய எண்ணங்களை அவர் சொல்லி வந்தபோது எனக்குக் கிரிஸ்டீன் கீலர் விவகாரம் ஞாபகத்துக்கு வந்தது. நான் சொன்னேன்: பிரிட்டனில் மந்திரியைக் கண்டித்துப் பார்லிமெண்டில் பேசிய



ஓர் அங்கத்தினர் கூறியதைக் கேளுங்கள்: 'கனம் மந்திரி ஒரு வேசியுடன் தொடர்பு கொண்டிருந்ததை நாங்கள் கண்டிக்கவில்லை. அது அவருடைய சொந்த விவகாரம். ஆனால் இந்தத் தொடர்பின் மூலம் பிரிட்டனின் பாதுகாப்புக்குப் பங்கம் நேர்ந்தது என்பதைத்தான் கண்டிக்கிறோம். இவ்விஷயத்தில் மந்திரி கோழையாகி பாராளுமன்றத்தில் பொய் சொன்னதையே கண்டிக்கிறோம்!'

இதைக் கேட்டுவிட்டு ஜெயகாந்தன், ''இது போன்ற உண்மையான தனிமனிதன் சுதந்திரம் இங்கே இருக்கிறதா?'' என்றார்.

''சமூகம் தனிமனிதன் மீது ஆதிக்கம் செலுத்துவது ஓரளவுக்கு நல்லதுதானே? அது அவனை நெறிகெட்டுத் தறிகெட்டு ஓடாமல் காக்கும் அல்லவா?'' என்றேன்.

''அதுதான் இல்லை; நமது சமூகம் ஒருவன் ரகசியமாகக் கெட்டுப்போகத் தாராளமாக அனுமதிக்கிறது. நாலு பேருக்கு விஷயம் தெரிகிற மாதிரி அவன் கெட்டுப் போகிறதை மட்டுமே கண்டிக்கிறது! என் கதாநாயகன் முத்துவேல் கருணையிடம் மட்டுமல்ல, இன்னும் நாலு பேரிடம் கூட ரகசிய உடலுறவு கொண்டிருக்கலாம். சமூகம் அவனை ஒன்றும் சொல்லாது. அதை ஏமாற்றுவது எளிது.''

''மற்ற பல எழுத்தாளர்கள் எழுதுவதற்குக் கூசும் சில வார்த்தைகளை, பிறர் கையாளத் தயங்கும் உடலுறவு சம்பந்தமான சில பிரச்னைகளை நீங்கள் தைரியமாகக் கையாளுகிறீர்கள். உதாரணமாக 'செக்ஸ்' என்ற ஆங்கில வார்த்தையைச் சுமார் இருபது முப்பது இடங்களிலாவது இக்கதையில் பயன்படுத்தியிருக்கிறீர்கள்...''

''நான் 'செக்ஸ்' என்ற வார்த்தையைத்தான் பயன்படுத்தினேன், வேறு சிலரைப் போல் செக்லைத் தரவில்லை என்பதை நீங்கள் கவனித்திருப்பீர்கள்.''

''இந்த மாதிரி வார்த்தைகளைப் பயன்படுத்தி ஓர் அதிர்ச்சியைத் தருவதன் மூலம் நீங்கள் எளிதாகப் பிராபல்யம் அடையமுயலுகிறீர்கள் என்று ஏன் சொல்லக் கூடாது?''

''நான் அப்படி ஒன்றும் பிராபல்யம் அடைந்து விட்டதாகச் சொல்ல முடியாது. 'பிச் காதலே' எழுதியே என்னைவிடப் பிராபல்யம் அடைந்துவிட்ட எத்தனையோ எழுத்தாளர்களை உங்களுக்கே தெரியும்.''

''இந்தப் புத்தகத்தின் முன்னுரையில் 'பலரால் இந்தக் கதையை ஜீரணம் செய்ய முடியவில்லை' என்று குறிப்பிடுகிறீர்கள். சமூகம் இதுபோன்ற கதைகளை ஜீரணிக்க சக்தியில்லாமல் இருக்கும்போது அந்த அளவுக்கு மக்களின் உள்ளமும் அறிவும் முதிர்ச்சி அடையாதிருக்கும் போது—இது போன்ற கதைகளை அவர்கள் தப்பர்த்தம் செய்து கொண்டால்...? தவறான பாதையில் இவை அவர்களை இட்டுச் செல்லுமேயானால்?''

''நான் விருந்து படைக்கிறேன். ஜீரணத்துக்கு மருந்தும் தர என்னால் முடியாது. அது டாக்டருடைய வேலை. பலர் தப்பர்த்தம் செய்து கொண்டு கெட்டுப் போகலாம். ஆனால் அதற்காகப் புது முயற்சிகளை மேற்கொள்ளாமலே இருந்தால், இலக்கியப் பசி கொண்டு வாடும் வேறு பலர் ஆகாரமின்றி செத்தே போவார்களே!''

''நமது நாடும் மக்களும் இன்னும் எவ்வளவோ உயர வேண்டியதிருக்க அதற்காக லட்சிய நோக்குக் கொண்ட கதைகளை நீங்கள் ஏன் படைக்கக் கூடாது?''

''சமூகத்தை உயர்த்துவது என் வேலையல்ல; அதற்குக் கதை எழுதுவானேன்? 'ஜாக்கி'யை வைத்து உயர்த்த முயலலாமே? என்னுடைய கடமை நாவல் எழுதுவதுதான். அதைத்தான் நான் செய்கிறேன்.''

''உங்கள் நாவல் புத்தக உருவிலே வரும்போது முதிர்ச்சியடைந்த மனங்கள் படித்து ரசிக்கலாம். ஆனால் ஏராளமாக விற்பனையாகி பெரியோர் சிறியோர் என்ற வித்தியாசமின்றி எல்லார் கையிலும் புழங்கும் பத்திரிகைகளில் வரும்போது இளம் உள்ளங்கள் படித்து அதைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் போனால் ...?''

''அது என் தவறல்ல; நான் எந்தப் பத்திரிகையையும் என் கதைகளைப் போடுங்கள் என்று கேட்டுக் கொள்வதுமில்லை; போடாததற்காக யார் மீதும் கோபப்படுவதுமில்லை.''

''நீங்கள் பொதுவுடைமைக் கட்சியில் ஒரு காலத்தில் தொடர்பு கொண்டிருந்ததால்தான் ஏழை பாழைகளின் வாழ்க்கையைப் பற்றி நிறைய எழுதுகிறீர்களோ?''

''நான் அந்தக் கட்சியில் இருந்த காலத்தில் அதனால் நான் பயனடைந்திருக்கலாம்; என்னாலும் அது பயனடைந்திருக்கலாம். ஆனால் என்னுடைய எழுத்துக்கும் அரசியலுக்கும் யாரும் முடிச்சுப் போட வேண்டாம். நான் ஏழை பாழைகளைப் பற்றி மட்டுமல்ல, செல்வச் சீமான்களைப்பற்றியும் எழுதுகிறேன்; நடுத்தர வர்க்கத்தினரையும் விட்டுவிடவில்லை'' என்றார் ஜெயகாந்தன்.

தென் ஆர்க்காடு மாவட்டம் கடலூரில் 25–5–1934ல் பிறந்த ஜெயகாந்தன் சுமார் இருநூறு சிறுகதைகளையும், ஐந்து குறுநாவல்களையும் இரண்டு நாவல்களையும் எழுதியிருக்கிறார். திரைப் படங்களாக வெளிவந்துள்ள இவருடைய 'உன்னைப் போல் ஒருவன்', 'யாருக்காக அழுதான்' இரண்டில் முன்னதற்கு ஜனாதிபதியின் பாராட்டுப் பத்திரம் கிடைத்தது.

'எண்ணங்களுக்கு எழுத்து வடிவம் தரும்போது எவ்வளவு முயன்றும் சில சந்தர்ப்பங்களில் திருப்திகரமாக அமைவதில்லை. அதனால் ஒரு கதையை எழுதுவதைவிட அது பற்றி எண்ணுவதிலேயே அதிகமான நிறைவு காண முடிகிறது' என்பவர் திரு ஜெயகாந்தன்.

தினமணி கதிரில் வெளியான இந்த நெடுங்கதையில் ஜெயகாந்தன் சொல்ல விரும்பும் கருத்துக்களின் துணிச்சல் புதுமையானது. சரியோ, தவறோ அழுத்தமாகத் தம் கருத்துக்களை 'மெய்போலுமே, மெய்போலுமே!' என்று நம்பும்படி சொல்லும் திறமை அவருடைய எழுத்துக்கு இருக்கிறது. ஆகவே வாசகர்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கதையினூடே கூறப்படும் சில புரட்சிகரமான கருத்துக்களைச் சிந்தனைக்குத் தூண்டுகோலாக ஏற்க வேண்டுமேயன்றி பொன்மொழிகளாக ஒப்புக் கொண்டு ஏமாந்து விடலாகாது.

—குட்டிகிருஷ்ணன்

---

''கோகிலா என்ன செய்து விட்டாள்'' என்ற புத்தகத்தில் இடம் பெற்றுள்ள நெடுங்கதை கிடைக்குமிடம்: மீனாட்சி புத்தக நிலையம், மதுரை—1; விலை: ரூ. 3-25.

# பின்னியின் புதிய B 380 கேஸ்மென்ட்

உங்களுக்கும், உங்கள் இல்லத்திற்கும்
பலவழிகளில் பயன்படும் சிறந்த துணி

கெட்டிச்சாயம், நீடித்துழைப்பது, அழகானது—பின்னியின் B 380 கேஸ்மென்ட் பொது உபயோகத்திற்கு மிகவும் பொருத்தமான துணி. உங்கள் இல்லத்தை அலங்கரிக்க, திரைச் சீலைகள் போட, குஷன் உறைகள் தயாரிக்க மேஜைத் துணிகளாய் பயன்படுத்த மிகவும் சிலாக்கியமானது. உங்களுக்கும், உங்கள் குழந்தைகளின் பள்ளிச் சீருடைகளுக்கும் உகந்த கவர்ச்சியான பல்வகை வண்ணங்கள் உள்ளன.




உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் உள்ள அங்கீகாரம் பெற்ற விற்பனையாளரிடமிருந்து வாங்குங்கள்.

**பின்னி**
- துணி உலகிலே புகழ்பெற்ற பெயர்

தி பெங்களூர் உல்லன், காட்டன் & சில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட், அக்ரஹாரம் ரோடு, பெங்களூர்-23
பின்னி & கம்பெனி லிமிடெட், மதராஸ் ஸ்தாபனத்தின் ஒரு கிளை.

BM-4723

# 007 பாலு

கதை: குமரன்

படம்: விஜயா

4
























கோபிக்காதே முத்து! நூறு ரூபாய் நோட்டு என்று நினைத்து ஏமாந்துவிட்டேன். இந்த நாளிலே தான் பத்து ரூபாய் நோட்டுக்கும் நூறு ரூபாய் நோட்டுக்கும் வித்தியாசமே தெரியவில்லையே!
பிழை செய்தது அதை விட பயித்தியக்காரத்தனம்....


...சந்திரனிடம் போய் நேரில் விஷயத்தைச் சொல்லச் சொன்னால் இவன் துரையாட்டம் கடிதமாக எழுதி இருக்கான் சோம்பேறி!
அந்தத் தபால்காரன் இப்படி விஷயத்தைத் தலைகீழா மாத்திப்புடுவான்னு நான் கண்டேனா!


உன்னுடைய எழுத்து அத்தனை கோணல்! நாலாவது வகுப்பிலே நாலுதரம் 'கோட்' அடிச்சவன் இதுக்கு மேலே எங்கே எழுதிக் கிழிக்கப் போறே!
உங்க ரெண்டு பேர் மேலேயும் தலைவர் நடவடிக்கை எடுப்பார். இனிமேல் நாம இங்கே சந்திக்கக் கூடாது! ஆபத்து!


அடுத்தாற்போல் எங்கே என்று சந்திப்பது என்பதை நானே நேரில் வந்து ஒவ்வொருவருக்கும் சொல்வேன். அதுவரை அவரவர்களும் சாதுப் பூனை போல் பதுங்கி விட வேண்டும்.


அது சரி, அந்த வாடியா பாங்குக் கொள்ளை சம்பந்தமா....


இடியட்! பேசக்கூடாது! எப்போ இந்த விஷயம் இரண்டு பேருக்குத் தெரிந்து போச்சோ, இனி நம்ம திட்டங்களைப் பற்றி ஒரு வார்த்தை இங்கே பேசக் கூடாது!


தலைவரைக் கலந்தாலோசித்துக் கொண்டு வருகிறேன். புதிய இடத்திலே மறுபடி திட்டங்களை மீண்டும் பரிசீலிக்கலாம்.
முத்து அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பினான். அவன் வெளியே வந்த போது...


....பாலு எவ்வளவோ ஜாக்கிரதையாகப் பதுங்கி இருந்தும் அவன் நிழல் தென்பட்டது. அதைப் பார்த்து விட்டன முத்துவின் கூர்க் கண்கள்.
தொடரும்...

# கிளிஞ்சல் கோபுரம்

அத்தியாயம் நான்கு

## மலர்ந்தும் மலராக் காதல்

'பருவத்தில் பயிர் செய்' என்பதாக ஒரு பழமொழி உண்டு. வேளாண்மைத் தொழிலுக்கு மட்டும் அது உரியதன்று; மனிதர் தாமாகவோ பிறராலோ ஏற்க விழைகின்ற ஏதேனும் ஓர் இலட்சியம், ஒரு கொள்கை, ஒரு சபதம், ஒரு வைராக்கியம் ஆகியவற்றுக்கும் பொருந்தும்.

இருபதுக்கு முந்தைய பருவம் சதுப்பு நிலம் போன்றது. அதில் விளைப்பதெல்லாம் முளை விடும்; ஆனால் எதுவும் உருப்படியாக வளராது. வேர் விட்டு ஓங்கி உயராது. புதிது புதிதாக வந்து சேரும் வண்டலில் — அதன் ஈரக் காய்ப்பில் — அவை அழிந்து புதைந்து போய் விடும்.

முப்பதுக்குப் பிந்தைய பருவமோ கட்டாந் தரை போன்றது. ஏமாற்றம், தோல்வி, பயம், விரக்தி முதலானவற்றால் இறுகிக் கெட்டித்துப் போன களர் நிலம் அது. எவ்வளவுதான் அதை இடித்துப் பொடித்துக் கொத்திக் கிளறிப் பண்படுத்தி விதை தூவினாலும் முளையாது; விதையே வெடித்துச் சிதறிவிடும். அப்படி வெடிக்காமல் முளைத்தாலும் வேர் பாய்ச்சாது; சீக்கிரமே கருகித் தீய்ந்துவிடும். தீயாமல் தலையெடுத்தாலும் தழைத்துச் செழித்து வளர்ந்து பலன் தராது. தளர்ச்சுத் தங்கச்சியாகத் தலைசாய்த்தே கிடக்கும். சப்பாத்திக் கள்ளியும் வேலமுள் மரங்களும் வேண்டுமானால் அதில் ஓங்கி வளரலாம்.

இருபதுக்கும் முப்பதுக்கும் இடைப்பட்ட பருவம் — அது அற்புத சக்தி வாய்ந்த நன்செய் நிலம், அதிசயத் திறன் படைத்த ஜீவ மண். அது புனிதமானது, வளமானது. அதன் ஒவ்வோர் அணுத் துகளிலும் உயிர்த் துடிப்பு நிரம்பியிருப்பது. அதிலே விதைப்பதெல்லாம் பயிராகும்; நடுவதெல்லாம் மரமாகும். அது காணும் கனவையெல்லாம் நனவாக்கும், எண்ணும் எண்ணங்களெல்லாம் வண்ணமுறச் சித்தியாகும். அது காற்றில் ஏறி விண்ணையும் சாடும், விண்ணில் ஏறிக் காற்றையும் பிடித்து வரும். மண்ணைக் குடைந்து கடலாக்கும், கடலைத் தூர்த்து மலையாக்கும். இலட்சிய விதை, சபதக் கொட்டை, வைராக்கிய பதியன் ஆகிய அனைத்துமே அதனதன் வெற்றி வடிவத்தை அந்தப் பருவத்தில் — அந்தப் பத்தரை மாற்றுப் பசும் பொன் மண்ணில் — ஊட்டம் நிறைகூலமாகவும், நறுமணஞ்சேர் நன்மலராகவும், தேன்சுவைக் கனியாகவும் விளைத்துக் காட்டியே தீரும்.

இதில் ஐயமுண்டா? இதோ, அழகாகச் சிரித்துக் கொண்டு நிற்கிறான் முத்துசிவன்!

ஆமாம்; அந்த இருபதுக்கும் முப்பதுக்கும் இடைப்பட்ட — வாலிபத்தின் சகல கம்பீரங்களும் கொண்ட—பருவத்தில் அவன் ஏற்ற இலட்சியத்தின் எல்லையை நோக்கி அதிசயிக்கத் தக்க விதமாக முன்னேறிக் கொண்டிருந்தான். உச்சிக் கிளையில் தொங்கும் கனியை வீழ்த்துவதற்காகத் தேர்ச்சியும் திறமையும் வாய்ந்த ஒருவனால் குறி வைத்து வீசியெறியப்பட்ட கவண் கல்லைப் போல் அணுவும் திசை பிசகாமல் வேகாவேசத்துடன் அவன் ஏகினான்.

ஐந்து வருடங்களுக்குள் தன் சுயத் திறமையாலும் அசுர உழைப்பாலும் சாதாரண குமாஸ்தா வேலையிலிருந்து படிப் படியாக உயர்ந்து தலைமைக் குமாஸ்தாவாகிவிட்ட அவன், தன் வீட்டின் பேரில் இருந்த கடன்களை ஒருவாறு தீர்த்துவிட்டு அடுத்தபடியாகத் தனது மூத்த தங்கை ஜானகிக்குத் திருமணம் செய்து வைப்பதிலும் முனைந்தான்.

தந்தையார் இருந்த போதே ஜானகி எட்டாம் வகுப்போடு படிப்பை நிறுத்தி விட்டாள். வெகுளியான சுபாவம். வீட்டு நிலவரத்தை அறிந்து கொண்டு ஒத்துப் போகத் தெரியாதவள். கொஞ்சம் சுயநலக்காரி. தனக்குத் தேவையானதை எப்படியும் அடையப் பிடிவாதமாக முயலும் குணம் படைத்தவள். சுகப் பிரியை. அதிர்ஷ்டவசமாக அவளுக்குக் கிடைத்த மாப்பிள்ளை நல்ல வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவனாயிருந்தான். குண்டக்கல்லில் இரும்பு

ஜெயகாந்தன்

வியாபாரி ஒருவரின் மகன் அவன். அவ்வூரிலேயே அவனுக்கு பாங்க் ஒன்றில் காஷியர் வேலை. தங்கமான குண நலன்கள் கொண்டவன்.

இத்தகையதொரு நல்ல வரனைத் தேடித் தன் தங்கைக்குச் செய்து வைத்ததன் மூலம் தனது இலட்சிய ஓட்டத்தில் அதன் முதல் எல்லைக் கல்லை வெற்றிகரமாக எட்டிப் பிடித் தான் முத்துசிவன்.

இந்த இலட்சியப் பாய்ச்சலில் அவ னுக்குக் குறுக்கீடு ஏதும் சம்பவிக்க வில்லையா? இல்லை என்று சொல்ல முடியாது. வீரியம் வாய்ந்த ஈர்ப்புச் சக்தியொன்றினால் அவன் சற்றுக் கவனத் தடுமாற்றம் கொள்ளவே செய்தான். ஆனால் எப்படியோ அந்த எதிர்மறைச் சக்தியின் ஈர்ப்பிலிருந்து உடனுக்குடன் தன்னை விடுவித்து நேர்ப்படுத்தியும் கொண்டு விட்டான்.

அந்த ஈர்ப்புச் சக்தி எது? —

**ஜா**னகியின் திருமணம் குண்டக்கல் லில் மாப்பிள்ளை வீட்டிலே நடந்து முடிந்த பின், பெண்ணையும் பிள்ளையை யும் மரு உண்ணலுக்கு அழைத்து வந்து ஒரு வாரம் ஏக தடபுடலாக விருந்துகள் நடத்தி, சம்பந்தி வீட்டாருக்கு வாக் களித்தபடி எல்லாச் சீர் வரிசைகளும் செய்து சாங்கோபாங்கமாக வழிகூட்டி ரயிலேற்றி அனுப்பி வைத்துவிட்டு மகிழ்ச்சியுடனும் மன நிறைவோடும் சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து வெளியே வந்த முத்துசிவன் அப்போது ஸ்கூட்டர் இல்லாத காரணத்தால் ஒரு டாக்ஸி யைப் பிடிக்கச் சாலையோரம் நின் றிருந்த போது அழகிய ஸ்டாண் டர்ட் ஹெரால்ட் கார் ஒன்று வந்து அவனருகில் நிற்க, ''வீட்டுக்குத் தானே போகிறீர்கள்? வாருங்கள்!'' என்ற இனிய குரல் கேட்டுச் சட் டென்று திரும்பினான்.

அழகே வடிவான ஓர் இளம் பெண் டிரைவர் ஆசனத்தில் அமர்ந்தபடி



ஸ்டியரிங்கை ஒரு கையால் பிடித்துக் கொண்டு மறு கையால் கதவைத் திறந்து விட்டாள். அவள் வேறு யாரு மல்ல; சுகுணாதான் !

முத்துசிவனின் உடல் குப்பென்று வியர்த்துக் கொட்டியது. உள்ளார்ந்த பயத்துடனும் வெளிப்படையான வெட்கத்துடனும் அவளைப் பட்டும் படாமல் பார்த்துப் புன்முறுவல் பூத்தவன், ''நான் டாக்சிக்காக நிற்கிறேன். அதோ ஒன்று காலியாக வருகிறது. உனக்கு வீண் சிரமம்....'' என்று குழறினான்.

''பரவாயில்லை; உட்காருங்கள் '' என்றாள் அவளும் கூச்சப் புன்னகையுடன்.

அது ஒற்றைக் கதவு கொண்ட காரானதால் முன்சீட்டைக் கீழே சாய்த்துக் கொண்டு போய்ப் பின் சீட்டில் அமர வேண்டும். அவள் அந்த சீட்டை மடிக்காமல் அதன் மீது தன் அழகிய வெண் தந்தம் போன்ற கரத்தை நீட்டித் துவளப் போட்டுக் கொண்டிருந்ததால் அவன் என்ன செய்வதென்று தெரியாமல் ஒருகணம் தவித்தான். பிறகு அசடு வழியச் சிரித்துக்கொண்டே முன் சீட்டில் அமர்ந்து கதவைச் சாத்தினான்.

அவனை ஒரு கணம் இதமாகப் பார்த்துக் குறுநகை புரிந்த அவள் வெகு லாகவமாகக் காரை வளைத்துத் திருப்பி மவுண்ட் ரோடை நோக்கி மிதமான வேகத்தில் செலுத்தினாள். அவள்தான் என்ன அழகாகக் கார் ஓட்டுகிறாள்! ரொம்பவும் பதவிசாக ஒடுங்கி உட்கார்ந்தவாறு அவளையே விழியசைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான் முத்துசிவன்.

யார் இந்தச் சுகுணா ?

முத்துசிவனின் தந்தை நடத்தி வந்த டைப் ஃபவுண்டரியில் காஸ்டிங் பகுதிக்கு ஃபோர்மேனாக இருந்த கனகசபை என்பவர் அந்த ஃபவுண்டரி நொடித்துப் போய்ச் சாத்தப்பட்டவுடன் வேறு ஏதேதோ வேலைகள் பார்த்து விட்டுக் கடைசியில், சிறு தொழில் வளர்ச்சித் திட்டத்தின் கீழ்



சர்க்கார் அளிக்க முன்வந்த கடனுதவியைப் பெற்று 'கனகா இண்டஸ்ட்ரீஸ்' என்னும் பெயரில் தொழிலகம் ஒன்றை ஆரம்பித்தார். அதில் பூட்டுக்கள், இரும்புக் கல்லாப் பெட்டிகள், கீல்கள் தாழ்ப்பாள்கள், கொக்கிகள், பலவகையான ஆணிகள் முதலானவை உற்பத்தி செய்யப்பட்டன. அவற்றுக்கு மார்க்கெட்டில் நல்ல கிராக்கியும் ஏற்பட்டது. குறிப்பாக அந்தப் பட்டறையின் பெயர் கொண்ட பூட்டுக்கள் மிகவும் பிரபலமாயின. ஐந்தாறு வருடங்களுக்குள் சென்னையிலே கனகசபை குறிப்பிடத்தக்க ஒரு புள்ளியாஞர். அவருடைய மகள்தான் இந்தச் சுகுணு.

சுகுணுவும் முத்துசிவனும் ஒரே கல்லூரியில் படித்தவர்கள். அவன் பி. ஏ. இரண்டாம் ஆண்டில் இருந்த போது அவள் பி. யூ. சி.யில் வந்து சேர்ந்தாள். அவ்விருவர் குடும்பத்தினருக்கும் நெருங்கிய நட்புறவு இருந்ததால் அவர்களும் நெருங்கிப் பழக நேர்ந்தது. அந்தப் பழக்கம் விரைவிலேயே காதலாகவும் மலர்ந்தது.

அவர்களின் காதல் அதிக காலம் மறைக்கப்பட்டிருக்கவில்லை. இருவர் வீட்டாருக்கும் விரைவில் தெரிய வந்தது. அவர்களுக்கு அது ஒரு மகிழ்ச்சிகரமான விஷயமாகவும் ஆயிற்று. தம் பெண்ணை முத்துசிவனுக்குச் செய்து வைக்கப் பெருமையோடு முன்வந்தார் கனகசபை. முத்துசிவனின் தந்தையும் அதற்குப் பூரண சம்மதம் தெரிவித்தார். பையன் பி. ஏ. முடித்ததும் திருமணத்தை நடத்திவிடலாம் என்று தீர்மானமாகியது.

இதற்கிடையில் முத்துசிவனின் தந்தை காலமாகி விடவே அந்தத் தீர்மானம் அப்படியே நின்றுபோயிற்று.

ஆனாலும் இவ்விஷயமாகக் கனகசபையும் சுகுணுவும் எவ்வளவோ முயற்சி எடுத்துப் பார்த்தார்கள். முத்துசிவனுக்கு ஏதேதோ வாக்குறுதிகளும் அளிக்கத் தயாராயிருந்தார்கள்.

அவன் சுகுணுவை மணந்து கொண்டால் அவனுடைய தம்பி தங்கைகளின் படிப்பையும் திருமணங்களையும் தாமே முழுப் பொறுப்பேற்று நடத்தி முடித்து வைப்பதாகச் சொன்னுர் கனகசபை. தம் மகளின் மனத்துக்கிசைந்தவனை அவளுக்குச் செய்து வைக்க வேண்டுமென்பதோடு தமக்கு ஒரு காலத்தில் முதலாளியாயிருந்து சம்ரட்சித்தவரின் குடும்பத்துக்குத் தம்மால் இயன்ற வரை உதவ வேண்டும் என்ற நன்றியுணர்ச்சியின்பாற்பட்ட நல்லெண்ணத்தாலும் இவ்வாறு வாக்களிக்க முன் வந்தார் அவர்.

ஆனால் முத்துசிவனே அந்த யோசனையை அடியோடு ஏற்க மறுத்துவிட்டான். அது தன் குடும்ப கௌரவத்துக்கும் தந்தையின் பெருமைக்கும் இழுக்கைத் தரும் என்பதோடு தன்னுடைய சுய பௌருஷத்துக்கும் அதனால் சிறுமை நேரும் என்ற எண்ணம் ஒருபுறமிருக்க, தன் கையின் உழைப்பைக் கொண்டே தனது குடும்ப நிலையை உயர்த்தித் தம்பி தங்கைகளின் நல் வாழ்வுக்கு வழி வகுத்து வைக்க வேண்டும் என்பதுடன் தன்னுடைய சொந்த வாழ்க்கையையும் தானே தன் பலத்தைக் கொண்டு அமைத்துக் கொள்ள வேண்டும் என்ற தன்மான வேட்கை இன்னொருபுறமிருக்க, — இவற்றையெல்லாம் அவளிடம் வாய் விட்டுச் சொல்லாமல் —தன் தம்பி தங்கைகள் நால்வருக்கும் திருமணமான பிறகே தனது திருமணம் பற்றி யோசிப்பது என்றும், அது வரையில் பிரம்மசாரியாகவே இருப்பது என்றும் தான் உறுதியோடு மேற்கொண்டுவிட்ட இலட்சிய விரதம் ஒன்றை மட்டுமே அவன் வெளிப்படையாகவும் வலியுறுத்தியும் கூறினுன்.

இதற்கு மேல் கனகசபையால் என்ன சொல்ல முடியும், ஏது செய்ய இயலும்? இனி இவ்விஷயத்தைத் தம் மகளின் சொந்த முடிவுக்கே விட்டு விடுவது என்று அவர் வாளாவிருந்து விட்டார்.

சுகுணுவும் மனம் சோர்வடையாமல் அவனை இரண்டொரு முறை தனிமையில் சந்தித்து வேறு சில வாக்குறுதிகளைக் கொடுத்து அவனுடைய மனத்தை மாற்ற முயன்றுள். அதாவது, தன்னை அவன் மணந்துகொள்வதால் அவனுடைய இலட்சியப்படி தம்பி தங்கைகளைச் சீராட்டிப் பாராட்டி வளர்ப்பதிலோ, படிக்க வைப்பதிலோ திருமணம் செய்து தருவதிலோ ஏதேனும் தடங்கல், அல்லது குடும்பத் தகராறுகள் ஏற்படும் என அஞ்சவேண்டியதில்லை என்றும், அத்தகைய பிசகு அணுவும் நேராமல் தான் நடந்துகொள்வதாகவும் சொன்னுள். இதிலும் நம்பிக்கை இல்லையென்றால் தங்கள் திருமணம் முடிந்த அன்றே தன்னைத் தனது தாய் வீட்டுக்கு அனுப்பி வைத்துவிட்டு அவன் அவன் வீட்டிலேயே இருந்து கொண்டு தன் தம்பி தங்கைகளுக்கு செய்ய வேண்டிய கடமைகள் அனைத்தையும் நிறைவேற்றி முடித்த பின் சாவதானமாகத் தன்னை அவனிடம் அழைத்துக்கொள்ளலாம் என்றும் அது

*தாயிடமிருந்து மகளுக்கு வரும்*
*உட்வர்ட்ஸ் அறிவுரை*

## உங்கள் குழந்தையை ஆரோக்கியமுடன் குதூகலமாக வைத்திருக்க உறுதுணை

# உட்வர்ட்ஸ்

கிரைப் வாட்டர்

தலைமுறை தலைமுறையாக புத்திசாலித் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்குக் கொடுத்து வருவது உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர். குடல் வலி, புளிப்பு, உப்புசம், பல்முளைப்புக் கோளாறுகள் ஆகியவற்றுக்கு உடனடி நிவாரணம் தருவது உட்வர்ட்ஸ்.

காத்துக் கொள்வீர்
கண்டிப்புடனே.
எப்போதும் ஒரு புட்டி
உங்கள் கைவசமிருக்கட்டும்




உட்வர்ஸ் கிரைப் வாட்டர்
நூறு ஆண்டுகளுக்கு மேலாக
புத்திசாலித் தாய்மார்களால்
உபயோகிக்கப் பட்டு வருகிறது.

AT. 30

வரையில் அவனுக்கு எவ்வித மனக் கிலேசமும் தராத வகையில் அவள் காத்திருப்பதாகவும் மற்றொரு யோசனையைத் தெரிவித்தாள்.

முத்துசிவன் இவ்விரண்டு யோசனைகளுக்குமே உடன்பட மறுத்துவிட்டான். அப்படியெல்லாம் செய்வதன் மூலம் அவளை ஏதோ ஒரு வகையில் தான் தண்டிப்பது போலவும் அவளுக்கு வஞ்சனை செய்வது போலவும் ஆகும் என்பதோடு, தானும் அவளும் தன் தம்பி தங்கைகளோடு எவ்வளவுதான் உண்மையான பாசப் பரிவுடன் நடந்து கொண்டாலும் அவர்கள் தங்களைச் சந்தேகக் கண்ணுடனேயே நோக்குவார்கள் என்றும், அதுவே அவர்களிடம் ஒருவித ஏக்கத்தையும், துயரத்தையும், அவநம்பிக்கையையும் தாங்கள் அநாதை என்ற ஓர் உணர்வையும் உண்டுபண்ணிவிடும் என்றும், அப்படி ஒரு நிலைமை ஏற்படின் அதைத் தன்னால் சகிக்கவே முடியாதென்றும், அதனால் தன் இலட்சியமே தவிடுபொடியாகிவிடும் என்றும் கூறிவிட்டான் முத்துசிவன்.

இதற்கு மேல் அவனிடம் வாதிடத் திராணியற்றுப் போன — வாதிட்டாலும் பயன் கிட்டாது என்பதைப் புரிந்து கொண்ட சுகுணா இறுதியில் தன்னுடைய முடிவையும் தெரிவித்தாள். அதாவது, இனி அவனைத் தவிர வேறொருவனைத் தன்னால் கனவிலும் கருத முடியாதென்றும், ஆகவே அவனது இலட்சிய நோன்பு வெற்றிகரமாக நிறைவுறும்வரையில் அவனுக்காகத் தான் காத்திருப்பதாகவும் சொல்லிச் சென்றுவிட்டாள்.

அப்படிச் சொன்னவாறு நடக்கவும் தலைப்பட்டாள். அவனை அதற்குப் பின் அவள் எங்கும் சந்திப்பதில்லை. அசந்தர்ப்பமாகச் சந்திக்க நேர்ந்தாலும் அவனுடன் அதிகம் பழகியறியாதவள்போல் ஓர் இளநகை பூத்து விட்டுப் போய் விடுவாள். அத்துடன், அவளுடைய மனமோ, தனது நெஞ்சமோ தங்கள் காதலை எண்ணிப் பார்த்துச் சலனமடையாமல் இருக்கும்பொருட்டுத் தன் படிப்பையும் தொடர்ந்தாள்.

பி. ஏ. பாஸ் பண்ணினாள். அதோடு நில்லாமல் இப்போது பி. டி. படித்துக் கொண்டிருப்பதாகவும் கேள்வி. அது அவளுக்குத் தேவையே இல்லை தான். அதாவது ஆசிரியைத் தொழில் செய்து சம்பாதிக்க வேண்டிய அவசியம் இல்லை. காரணம், அவளின் தந்தை சேர்த்து வரும் சொத்துக்களை அநுபவிக்கவே அவள் இன்னும் மூன்று பிறவிகள் எடுத்தாக வேண்டும். எனினும், தன் காதல் நோன்பின் வெற்றிக்காக அவ்வாறெல்லாம் தன்னை 'வதைத்துக்'கொள்ள அவள் தயங்கவில்லை.

இப்படி அவன் மீது அவள் கொண்டுள்ள அத்துணை ஆழ்ந்த அன்பை, பக்தியை, நம்பிக்கையை அவனும் அறியாமலோ, உணராமலோ இல்லை. சில சமயம் அவற்றை அவன் அதிகமாக அறிவதன் மூலமும் உள்ளம் சலனமடைந்து போவான். ஆனால் உடனேயே தன்னைச் சமாளித்துக் கொள்வான். தன் மனத்தில் ஏற்பட்ட அந்நெகிழ்ச்சியைத் தன் இலட்சியம் எனும் சூட்டுக் கோலால் உடனுக்குடன் சுட்டுப் பொசுக்கி இறுக்கி இரும்பாக்கிக் கொள்வான்.

இவ்விதமாக அவனும் அவளும் இருந்து வரும் நிலையில், இன்று இதோ அவளுக்கு என்ன வந்துவிட்டது?

ஒரு ஹோட்டலின் முன் காரை நிறுத்திய சுகுணா, ''வாருங்கள், காபி சாப்பிடுவோம்!'' என்றவாறு காரிலிருந்து இறங்கி, அவன் தன்னோடு வருகிறானா இல்லையா என்பதையும் கவனியாதவள் போல் நடக்கலானாள்.



**"ஆபீசுக்கு நேரமாகலியா? மணி எட்டா குது. இன்னமும் என்ன தூக்கம்?"**
**"எதற்கு என்னை வீணாகத் தொந்தரவு செய்கிறாய்? என் சட்டைப் பையிலே வேலை நீக்க உத்தரவு வச்சிருக்கேன் படிச்சுப் பார்!"**

---

மெல்லவும் முடியாத, விழுங்கவும் முடியாத தவிப்புடன் அவளைப் பின் தொடர்ந்தான் முத்துசிவன்.

அந்த ஹோட்டலின் 'கார்டன்' னில் சற்று ஒதுக்குப்புறத்திலிருந்த ஒரு மேசையண்டை போய் இருவரும் அமர்ந்தனர்.

சுகுணா இரண்டு கப் காப்பிக்கு மட்டும் ஆர்டர் கொடுத்துவிட்டு மௌனமாய் உட்கார்ந்திருந்தாள். தங்கள் திருமண விஷயமாய் அவள் ஏதேனும் கேட்டுவிடுவாளோ — அப்படிக் கேட்டால் என்ன சொல்வது — என்ற குழப்பத்தில் ஆழ்ந்தவனாய் அவளையே திருதிருவென விழித்துப் பார்த்துக்கொண்டிருந்தான் முத்துசிவன்.

காபி வந்தது. "சாப்பிடுங்கள்!" என்று இனிய குரலில் சொன்ன சுகுணா ஒரு கோப்பையை அவனருகில் நகர்த்தி வைத்துவிட்டுத் தான் ஒன்றை இழுத்துக் கரண்டியால் காப்பியைக் கலக்கிக் கொண்டே, "உங்களுக்கு ஒரு சின்ன விஷயம் தெரியுமா? நான் பி.டி.யில் தேறிவிட்டேன்!" என்றாள் மிகச் சாதாரணமாக.

"அப்படியா? மெத்த மகிழ்ச்சி!" என்று போலியான சிரிப்புடன் சொன்ன முத்துசிவன் இன்னும் ஏதோ சொல்ல வாயெடுத்துச் சொற்கள் சரியாகக் கிடைக்காமல், திண்டாடித் திணறி விட்டு, "என் பாராட்டுக்கள்!" என்றான் குழறலாக.

அவள் அவனைக் குறும்பாகப் பார்த்துச் சிரித்தாள். அதைக் கவனியாதவன்போல் காப்பியை எடுத்துப் பருகலானான்.

"ஜானகியின் திருமணம் நல்லபடியாக முடிந்து விட்டதல்லவா?"

தான் எதிர்பார்த்த கேள்வி அடுத்து வரப் போகிறது என்ற நினைவுடன், "ஊம்" என்றான் முத்துசிவன்.

"இன்றுதான் அவளைப் புக்ககம் அனுப்பி வைத்தீர்களாக்கும்?"

"ஆமாம்."

"அந்தக் கல்யாணத்துக்கு நானும் வரத்தான் இருந்தேன். அப்புறம்.... அப்பாவை மட்டும் அனுப்பி வைத்தேன்."

"உன்னைப் பற்றி அவரிடம் விசாரித்தேன்."

"நிஜமாகவா?"

"ஏன்?..."

"ஒன்றுமில்லை; என் நினைவு உங்களுக்கு இருக்கிறதா என்று சந்தேகம்."

உள்ளார்ந்த பீதியுடன் மெல்லச் சிரித்துக் கொண்ட முத்துசிவன், "அப்படியெல்லாம் சந்தேகப்பட வேண்டாம். ஆனால்..." என்று திணறி இழுத்தான்.

"ஆனால்?... அதைக் கொண்டு 'நம் கல்யாணம் எப்போது என்று மாத்திரம் கேட்டுவிடாதே' என்கிறீர்களா?" என்றாள் சுகுணா கலீரெனச் சிரித்துக் கொண்டே. "பயப்படாதீர்கள். அப்படியெல்லாம் கேட்டு உங்களைச் சோதனைக்குள்ளாக்க மாட்டேன். இன்னும் ஒரு தங்கைக்கும் இரண்டு தம்பிகளுக்கும் நீங்கள் திருமணம் செய்து வைக்கும் வரையில் உங்களிடம் அம்மாதிரிக் கேள்வியைக் கேட்கக் கூடாதென்பதையும் நான் மறக்க மாட்டேன்!"

அவள் அமைதியாக எழுந்தாள். முத்துசிவனும் தட்டுத் தடுமாறியபடி எழுந்தான். இருவரும் சென்று காரில் அமர்ந்தனர்.

சுகுணா அவனிடம் பிறகு எதுவும் பேசவில்லை. அவனுடைய வீட்டெதிரே அவனை இறக்கி விட்டுவிட்டுப் புன்னகையால் விடை பெற்றுக் கொண்டு போய் விட்டாள் அவள்.

இப்படிப்பட்டதோர் 'ஈர்ப்புச் சக்தி' யால் இழுபட்டு விடாமல் உறுதியுடன் நின்று தன் இலட்சிய ஸ்தம்பத்தை நோக்கி ஒருவன் நடை போடுவதென்பது எளிதானதா? முத்துசிவன் எப்படியோ இதைச் சாதித்தே காட்டினான்.

மேலும் சில வருடங்கள் ஓடின.

தம்பி தில்லைநாதன் பி.காம் படித்து முடித்தான். பம்பாயில் அவனுக்கு நல்ல சம்பளத்திலே ஓர் உத்தியோகம் கிடைத்தது. ஓராண்டுக்குப் பின் அவனுடைய கல்யாணத்துக்கென பணம் சேமித்துக் கொண்டு பெண் தேடுவதில் முத்துசிவன் மும்முரமாய் முனைந்தபோது அவனிடமிருந்து ஓர் அதிர்ச்சி தரத் தக்க கடிதம் வந்தது.

**(தொடரும்)**




# —கோழை

சனிக்கிழமை. விடுமுறையின் அறிகுறி மாணவர் விடுதியில் எல்லாப் பகுதிகளிலும் பிரதிபலித்தது. ஒவ்வொரு அறையிலும் கும்மாளமும் கூத்தும்தான். சிகரெட்டுப் புகை கட்டடம் முழுவதும் மண்டி விடுதியிலிருந்து வெளிக் கிளம்பி வானமண்டலத்தை நோக்கிப் பயணமாகிக் கொண்டிருந்தது. கீழ்ப் பகுதியிலிருந்து ஓர் ஆபாசச் சினிமாப் பாட்டை ஒருவன் உரக்கப் பாடிக் கொண்டே கையில் சோப்புப் பெட்டியுடன் வராந்தா வழியாகக் குளியலறையை நோக்கிப் பாட்டுக்கேற்ப ஆடிக் கொண்டே நடந்து சென்றான். அவனுடைய பாட்டுக்குப் பக்க மேளமாக இன்னொரு அறையிலிருந்து அதே பாட்டை ஒருவன் உச்ச ஸ்தாயியில் சீட்டியடித்து ரசித்துக் கொண்டிருந்தான். மேல் மாடியிலிருந்து பலர் உரக்கப் பேசித் தர்க்கம் செய்யும் கூக்குரல் கேட்டுக் கொண்டிருந்தது. விடுதியின் மற்றப் பகுதிகளிலிருந்து பல தினுசான ஒலிகள் கிளம்பிக் கொண்டிருந்தன!

அவ்வளவு இரைச்சலிலும், கும்மாளத்திலும் அக்கறை காட்டாமல் சுந்தரம் தன்னுடைய அறையில் கதவைத் தாளிட்டுக் கொண்டு கட்டிலில் படுத்துக் கிடந்தான். அவனுடைய அறிவு, சிந்தனை எல்லாவற்றையுமே ஒரு படம் ஆட்கொண்டிருந்தது! அந்தப் படத்தைப் பல கோணங்களில் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தான். ஒரு தமிழ் சினிமாப் படத்தில் உள்ள காட்சி அது. ஒரு நடிகனும் நடிகையும் முக்கால் நிர்வாணத்தில் காதல் விளையாட்டில் ஈடுபட்டிருக்கும் கோலம்தான் அந்தப் படம்!

அதைத்தான் எத்தனை தரம் பார்த்தாகி விட்டது! இன்னும் அலுப்புத் தட்டவில்லை. பார்க்கப் பார்க்க அறிவு கலங்கியது. போதை ஏறியது. ஒருவித வெறி உடலெல்லாம் பரவிச் செயலிழக்கச் செய்துகொண்டிருந்தது. பார்த்த பிறகு படத்தைத் தூர வைத்தாலும் பார்த்த காட்சி மனத்திலிருந்து கொண்டு எப்படியெல்லாம் அலைக்கழிக்கிறது. ஒருவித வெறி. மனத்தின் தவிப்பு. திரும்பத் திரும்ப அதையே பார்க்க வேண்டும் என்னும் ஆசைத் துடிப்பு. ஒருவிதக் கற்பனைச் சுகத்தில் கட்டிலில் கிடந்த சுந்தரம், கதவு தட்டப்படும் ஓசை கேட்டுத் திடுக்கிட்டான்.

பரபரப்புடன் படத்தைப் படுக்கைக்கு அடியில் மறைத்து வைத்துவிட்டு, கதவைத் திறந்தான்.

ஆ.....!

# அழுத கண்ணீர்!

ர. சு. நல்லபெருமாள்

பக்கத்து வீட்டுக் குப்புசாமி முதலியார் அல்லவா! திகைப்பிலிருந்து விடுபடக் கொஞ்ச நேரமாயிற்று.

''தம்பி, சௌக்கியமா? நேற்றுத்தான் வந்தேன். இன்று ஊருக்குப் போகிறேன். உங்கப்பா உன்னைப் பார்த்துவிட்டு வரச் சொன்னார். நன்றாகப் படிக்கிறாயா?'' என்று கேட்டுக் கொண்டே அறைக்குள் நுழைந்து விட்டார், குப்புசாமி முதலியார்.

சுந்தரம், தட்டுத் தடுமாறி ஒரு நாற்காலியைச் சுத்தம் செய்து வந்தவரை உட்கார வைத்தான். ஒரு முறை அவனுடைய கண்கள் திருட்டுத்தனமாக அறையைச் சுற்றி வட்டமிட்டன.

கட்டிலுக்குப் பக்கத்தில் எரிந்து போன துண்டுச் சிகரெட்டுகள் சிதறிக் கிடந்தன. மேஜை மீது இரண்டு சினிமாப் பத்திரிகைகள் திறந்து கிடந்தன. கொடியில் பெண்கள் தாவணி மாதிரி ஒரு லுங்கி தொங்கியது. அறை முழுவதும் சிகரெட் புகையின் நெடி சூழ்ந்திருந்தது. குப்புசாமி முதலியார், அருவருப்புடன் முகத்தைச் சுளித்துக் கொண்டார். பிறகு, கொடியில் தொங்கிய தாவணியைப் பார்த்தார்.

''இது என்ன தாவணி? உன் தங்கச்சி செண்பகத்துக்கு வாங்கினயா? என்னிடம் கொடேன். நான் கொண்டு போய்க் கொடுத்திடறேன்'' என்றார்.

''ஹி...ஹி... அது தாவணி இல்லே. நான் உடுத்துகிற லுங்கி. இது பர்மாச் சரக்கு!'' என்றான் சிரித்துக் கொண்டே. முதலியாரின் பட்டிக்காட்டுத்தனத்தை எண்ணிச் சிரித்துக் கொண்டான்.

''பர்மாக்காரர்கள் இப்படித்தான் உடுத்துவாங்களா? வேடிக்கையாயிருக்கே! நீ ஏன் இதை உடுத்தறே?''

''இதுதான் இப்போ நாகரிகம்!''

''ஓஹோ....!

''நல்லாப் படிக்கிறியா? உங்கப்பாகிட்ட என்ன சொல்லணும்? உன் தங்கச்சி செண்பகம்தான் உன்னைப் பார்த்துட்டு வரும்படி கட்டாயப்படுத்தினாள். கடிதமே நீ போடலையாமே? உங்கப்பா ரொம்ப வருத்தப்பட்டாரு. உன்னை நம்பித்தானே அவங்க இருக்காங்க. அடிக்கடி கடிதம் போடு'' என்றார் முதலியார்.

''இப்போ பரீட்சை சமயம். அதனால் தான் போட முடியலே'' என்றான் சுந்தரம்.



மேஜை மீதிருந்த சினிமாப் பத்திரிகையை எடுத்துப் புரட்டினார் முதலியார். அதை யெல்லாம் பார்த்துத் தொலைக்கிறாரே என்று சுந்தரம் மனத்துள் சபித்தான். பத்திரிகையி லிருந்த படங்களை முறைத்துப் பார்த்த முதலியார், தீண்டத் தகாததைத் தொட்டு விட்ட உணர்வுடன் பத்திரிகையை மேஜை மீது அருவருப்புடன் போட்டார்.

"தம்பி, நான் போயிட்டு வரேன். நல்லாப் படி. கடிதம் போடு" என்று கூறிக்கொண்டே எழுந்தார்.

அவர் சென்ற பிறகும் சுந்தரத்தின் பர பரப்பு அடங்கவில்லை. மன்னூர் கோயில் கிரா மத்தில் மளிகைக் கடை வைத்திருக்கும் முதலியாரை அந்த ஹாஸ்டலில் யாராவது எதிர்பார்க்க முடியுமா? நானூறு மைல்கள் கடந்தல்லவா வந்திருக்கிறார்!

அறைக்குள் சிதறிக் கிடந்த கட்டைச் சிகரெட்டுக்களைப் பொறுக்கினான்.

'பார்த்திருப்பார். பார்த்தும் பார்க்காதது போலிருந்து விட்டார். ஊரில் போய்ச் சொல்லி விடுவாரோ?...'

சுந்தரத்தின் உடல் சிலிர்த்தது. மனம் தவித்தது.

இந்தச் சூழ்நிலையில் முதலியார் பார்த்து விட்டாரே என்ற நினைவு அலைக்கழித்தது.

"டேய், யாருடா வந்தது?" என்று கேட் டுக்கொண்டே முத்தையா உள்ளே நுழைந் தான்.

"எங்க ஊர். பக்கத்து வீட்டுக்காரர். நல்ல மனுஷர். திடீர்னு வந்துட்டார். கடை விஷயமாகச் சரக்கு எடுக்க வந்தாராம்" என்றான் சுந்தரம்.

"அதற்கு நீ பதறுவானேன்?"

"அவர் வந்தபோது நீ கொடுத்த படத் தைப் பார்த்துக்கிட்டு இருந்தேன். நல்ல வேளை அதை மறைச்சு வச்சுட்டேன்."

"அதனால் என்னடா? நீ இன்னும் சுத்தப் பட்டிக்காட்டானா இருக்கியே. காலேஜ் படிக்கிறவன் கிட்டே இதெல்லாம் இருக்கத் தான் செய்யும். பாவம், அவரு காலேஜைக் கண்டாரா, ஹாஸ்டலைக் கண்டாரா? இதுக் குப் போய் இப்படி நடுங்கறியே? நீ சுத்தக் கோழை."

"எங்க ஊரைப் பத்தி உனக்குத் தெரி யாது. இப்போ வந்தாரே முதலியார், இவ ரும் எங்கப்பாவும் நண்பர்கள். இவர்களுக் குத் தெரிஞ்சதெல்லாம் மன்னூர் கோயில் கிராமம், சுற்றியிருக்கும் வயல் வரப்பு, ஊருக்கு நடுவே இருக்கும் சிவன் கோயில் இவ்வளவுதான். இவங்க உலகமே இதுக் குள்ளேதான்." கையிலிருந்த சிகரெட்டுத் துண்டுகளை சன்னல் வழியாக விட்டெறிந் தான், சுந்தரம். பிறகு சொன்னான்:

"ஊரிலே போய் இதைப் பற்றி இவர் சொல்லிடக் கூடாது." சுந்தரத்தின் குரலி லிருந்த கவலை தெரிந்தது.

"சொன்னால்தான் என்னடா? சிகரெட்டு பிடிப்பது ஒரு பெரிய விஷயமா?" என்றான் முத்தையா வியப்புடன்.

"அப்பாவுக்குத் தெரிந்தால் ரொம்ப வருத் தப்படுவாங்க. ரொம்ப வைதிகமானவங்க. இதையெல்லாம் அவங்களால் தாங்கவே முடி யாது." என்றான் சுந்தரம் பயத்துடன்.

"சும்மா பயந்து சாகாதே. ராத்திரி ஒன் பது மணிக்கு ரெடியா இரு. என்ன?" என் றான் முத்தையா.

"வேண்டாண்டா. மனசு சரியாயில்லே."

"நீ ஒரு கோழை. ஒன்றுக்கும் லாயக் கில்லே. காலேஜில் படிக்க வந்திட்டியே. தைரியம் வேண்டாமா? எப்படிப்பட்ட கோழைடா நீ! இந்தப் படங்களைப் பார்க்கக் கூட ஆரம்பத்திலே பயந்து நடுங்கினியே! தைரியந்தாண்டா புருஷ லட்சணம். படத் தைப் பார்க்கவே பயந்தால் பிறகு நேரே எப்படித்தான் சந்திப்பாயோ? ராத்திரி ஒன் பது மணிக்குத் தயாரா இரு. கோழை மாதிரி மனசைப் போட்டு அலட்டிக்காதே" என்று கூறிவிட்டு முத்தையா சென்றான்.

சுந்தரம் அமைதியின்றித் தவித்தான். எப் படி இருந்தவன் எப்படி மாறிவிட்டான். மன்னூர்கோயில் கிராமத்துச் சூழ்நிலையில் வெள்ளை மனத்தோடு வளர்ந்திருந்தவனை இன்று நாகரிக யுவனாக மாற்றியவர்களுள் முத்தையாதான் முதன்மையானவன். மூன்று ஆண்டுகளுக்கு முன் பட்டை விபூதியுடனும், மிரண்ட பார்வையுடனும் வந்து இறங்கிய வன் — இன்று...!

**மா**சிலாமணி ஓதுவாரின் மகன் என்று அவனை இன்று அடையாளம் காண முடி யுமா? என்ன மாற்றம்? இதுதானே நாகரிக மாம். அப்படித்தான் முத்தையாவும் மற்ற வர்களும் படித்துப் படித்துக் கூறினார்கள். காலேஜ் படிப்பாமே; ஹாஸ்டல் வாழ்க்கை யாமே....?

அடேயப்பா! எவ்வளவு பெரிய கட்டடம்! எவ்வளவு உயரம்! எங்கு பார்த்தாலும் இள மையின் துடிப்பு, துள்ளல், கூச்சல், கும் மாளம்! சிகரெட்டுப் புகையின் மூட்டம். சினிமாவின் ஆட்ட பாட்டம்....

இவற்றுக்கு ஒரு பெயர்கூட வைத்திருக் கிறார்களே! 'ஜாலி' என்று பெயராம்...!

இதெல்லாம் மாசிலாமணி ஓதுவாருக்கோ குப்புசாமி முதலியாருக்கோ எங்கே புரியப் போகிறது? சிவன் கோவில் முன் மண்டபத் தில் இரவு பூஜைக்குப் பிறகு அவர்கள் இருவரும் சந்திக்கும்போது பேசும் பேச்சு, மன்னூர்கோயிலைப் பற்றியும், வாழ்க்கையில் அன்றைய பிரச்னை பற்றியும்தான் வளைய வளைய வரும். பக்கத்து ஊரில் நடக்கும் டூரிங் சினிமாவுக்குக்கூடப் போனது கிடை யாது. இது என்ன வாழ்க்கையோ...!

வீட்டு நினைவும், கடந்த கால ஞாபகமும் சுந்தரத்துக்கு வேதனையைக் கொடுத்தன.

முதன் முதலில் அவனை மேல் படிப்புக்கு அனுப்புவதற்காக மாசிலாமணி ஓதுவாரும் குப்புசாமி முதலியாரும் ரயிலடிக்கு வந் திருந்தபோது, ஓதுவார், எப்படித் துடித்தார்!

வண்டியில் ஏறிய சுந்தரம், சன்னல் பக்கத் தில் உட்கார்ந்திருந்தான். மாசிலாமணி ஓதுவார் பிளாட்பாரத்தில் நின்றுகொண்டு அவனையே பார்த்துக் கொண்டிருந்தார். திரும் பத் திரும்ப என்னத்தைப் பேச. இரண்டு நாளாக அவனை விட்டுப் பிரியாமல் என் னென்னவெல்லாமோ புத்திமதிகள் சொல்லி யாகிவிட்டது. இன்னும் என்ன பாக்கி?



பிரபல சமையல் கலைஞர் திருமதி பிரமீளா லால் தமது விசேஷப் பக்குவ முறை ஒன்றை உங்களுக்கு உதவுகிறார்.




# பேகிங் பவுடர்

## உபயோகித்து சுவைமிக்க உலர்ந்த திராட்சை கேக் செய்து பார்த்திருக்கிறீர்களா?

எவருக்கும் திகட்டாத இலேசான, இனிமையான கேக்!



கேக்குகள், பிஸ்கோத்துகள், பக்கோடா, பூரி, குலாப்ஜாமுன் முதலியவற்றை அதிமென்மையாகத் தயாரிக்க உதவுகிறது ரெக்ஸ் பேகிங் பவுடர். சிறிதளவு உபயோகித்தாலே போதும். ரெக்ஸ் பேகிங் பவுடர் அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப் படுத்தப் பட்டது. பேகிங் பவுடர்களில் மிகவும் சிறந்தது ரெக்ஸ்.




250 கி. பழுப்புச் சர்க்கரை
125 கி. வெண்ணெ
2 முட்டைகள்
125 கி. கடைந்த தயிர்
250 கி. மைதா மாவு
2 தேக்கரண்டி ரெக்ஸ் பேகிங் பவுடர்
ஒரு சி. கிராம்புப் பவுடர்
ஒரு சி. ஜாதிக்காய் பவுடர்
ஒரு சி. உப்பு
125 கி. உலர்ந்த திராட்சை

1. சர்க்கரையையும் வெண்ணெயையும் மென்மையாகும் வரை கலக்கவும். 2. ஒவ்வொன்றாக முட்டைகளைக் கடைந்து கொள்ளவும். 3. தயிருடன் சேர்த்துக் கலக்கவும். 4. மாவுடன் ரெக்ஸ் பேகிங் பவுடரைச் சேர்த்து சலித்துக்கொள்ளவும்; கலவையுடன் கிராம்பு, ஜாதிக்காய் பவுடர்களையும் உப்பையும் சேர்க்கவும். நன்குகடையவும் 5. உலர்ந்த திராட்சையைச் சேர்த்துக் கடையவும். 6. எண்ணெய் தடவிய சிறிய கேக் டின்களில் கரண்டியினால் எடுத்து ஊற்றி, சுமார் 20 நிமிஷங்களுக்கு 350° ப. வெப்பநிலையில் சுடவும்.

பக்குவ முறைகள் அடங்கிய இலவசமான செட் ஒன்றை எனக்கு ஆங்கிலம்/இந்தி/வங்காளம்/தமிழ்/தெலுங்கு மலையாளம்/குஜராத்தி மராத்தி மொழியில் தயவு செய்து அனுப்பவும்.

பெயர் ..................

முகவரி ..................

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புக:
கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட்,
ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாட்பி-ரோடு, பம்பாய்-1 பிஆர்

**உங்கள் சமையல் உன்னதமாக இருக்க உயர்ந்த சாமான்களையே உபயோகிங்கள்!**

இதுபோல் இன்னும் பல வகையான தின்பண்டங்களைத் தயார் செய்து உங்கள் குடும்பத்தினரை மகிழ்விக்கலாம். பின் வரும் இதழ்களைக் கவனித்துப் பாருங்கள்!

**கார்ன் பிராடக்ட்ஸ் கோ (இந்தியா) பிரைவேட் லிட.**
ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ்,
வாட்பி ரோடு, பம்பாய் 1 பிஆர்.



ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்:
பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், மதராஸ் 1
மற்றும் அவர்களது கிளைகள்



நடிகை : நான் சினிமாவிலே நடிக்கிறது எங்கப்பாவுக்குப் பிடிக்கலை இல்லே!
சிநேகிதி : உங்கப்பாவுக்கு மட்டுமா? லட்சக்கணக்கான ஜனங்களுக்குக்கூடத்தான் பிடிக்கலியே!

வண்டி ஊதிவிட்டது. ஓதுவார் பரபரப்படைந்தார். சுந்தரத்தைப் பார்த்தார். வண்டி நகர்ந்தது. சுந்தரத்தின் கையைப் பற்றிக் கொண்டார்.

''ஜாக்கிரதையாக இருந்துக்கோ...'' என்றார். சுந்தரம் தலையை ஆட்டினான்.

வண்டி மறையும்வரை நின்ற இடத்திலேயே நின்று கொண்டிருந்தார். கண்களில் நீர் மல்கியது. ஓதுவார் கண்கலங்கி யாரும் பார்த்ததில்லை. இப்போது மகனைப் பிரியும்போது பாசம் கட்டை மீறிக் கொண்டு வந்து விட்டதே!

''ஜாக்கிரதையாக இருந்துக்கோ'' என்று மட்டும் தான் அவரால் கூற முடிந்தது. எதில் ஜாக்கிரதை? சுந்தரம் என்ன காட்டுக்கா போகிறான்? மன்னார்கோயில் மனிதர்களைப் போலுள்ளவர்கள் வாழும் பட்டணத்தில் தானே வாழப் போகிறான்? இதற்கு ஜாக்கிரதை எதற்கு? ஏதோ சொல்லி வைத்தார். அவருள்ளே குமைந்த பயம், சொற்களாக அல்லித்தம் வெடித்து வந்தது.

இப்போது நினைத்தாலும் ஓதுவார் கண் கலங்கிப் பிளாட்பாரத்தில் நின்ற காட்சி சுந்தரத்தின் நெஞ்சில் எவ்வளவு நெகிழ்ச்சியைக் கொடுக்கிறது!

மன்னார்கோயில் கிராமத்து சிவன் கோயிலில்தான் மாசிலாமணி ஓதுவாருக்குத் திருப்பணி. தினமும் காலையிலும், மாலையிலும் பூஜை நடக்கும் நேரத்தில் சந்நிதியில் தேவாரம் திருவாசகம் பாடும் திருப்பணிதான் அவருக்கு. இரண்டு மூன்று தலைமுறைகளாகவே அவருடைய குடும்பத்தாருக்கு வழி வழியாக வரும் கோயில் திருப்பணி அது. அதற்காக அவருடைய குடும்பத்துக்குக் கோயிலிலிருந்து மான்யமும் உண்டு. மாதம் ஒரு கோட்டை நெல்லும், இருபது ரூபாயும்தான் அவருடைய வரும்படி.

அந்த வரும்படிக்காகக்கூட அவர் அந்தப் பதவி வகிக்கவில்லை. வழி வழியாக வந்திருக்கும் தெய்வத் திருப்பணியில் அவருக்கு ஆத்மார்த்தமான ஈடுபாடு.

ஓதுவார் மீது ஊரில் அத்தனை பேருக்கும் மதிப்பு. பக்தி கலந்த பயம் கூட உண்டு.

சுந்தரத்தையும் தம் பாதையில் திருப்பத்தான் ஆசை கொண்டார். ஆனால் அவனுக்கு இப்படிப் பாடிப் பிழைப்பதில் ஆர்வம் இல்லை. அவனுடைய பிடிவாதத்தைக் குலைக்க விரும்பாமல்தான் மேல் படிப்புக்குப் பட்டணத்துக்கு அனுப்ப இசைந்தார். பட்டணத்துக்கு வந்த பிறகுதான் அவன் எவ்வளவு மாறிவிட்டான்!

சரியாக ஒன்பது மணிக்கு முத்தையா வந்துவிட்டான். அறைக்குள் வந்தவுடன் கதவை உட்புறம் தாளிட்டான். சன்னல் கதவுகளையும் சாத்தினான். சுந்தரம் பயத்துடன் முத்தையாவையே பார்த்தான்.

முத்தையா மேஜை மீது உட்கார்ந்து கொண்டான். பைக்குள்ளிருந்த ஒரு சிறு பாட்டிலை எடுத்தான். பாட்டிலுக்குள் மஞ்சள் நிறத்தில் ஒரு திரவம் இருந்தது. சுந்தரத்தின் உடல் நடுங்கியது. மார்கழி மாதத்துப் பனியில் கூட அவன் உடல் வியர்த்தது.

''டேய், இன்னிக்கு வேண்டாண்டா இன்னொரு நாள் பார்த்துக் கொள்ளலாம்.'' என்றான், சுந்தரம் பயத்துடன். குரல் கெஞ்சியது.

''சேச்சே! முன் வைத்த காலைப் பின் வைக்கலாமா? இதுக்கெல்லாம் பயந்தால் எப்படித்தான் உலகத்தில் வாழப் போகிறாயோ? நீ சுத்தக் கோழை'' என்றான் முத்தையா எரிச்சலுடன்.

சுந்தரத்துக்கு நெஞ்சில் சுருக்கென்று தைத்தது. கோழை என்ற குற்றச்சாட்டை அவன் ஏற்கத் தயாராக இல்லை. ஆனால், ஏன் அவனுக்கு இப்படி வியர்க்கிறது? நெஞ்சு படபடப்பானேன்?

''எத்தனையோ நாளா முயற்சி பண்ணி இப்போ வீரனாயிருக்கே? உன்னைத் தட்டிக் கொட்டி ஆளாக்கிறத்துக்குள்ளே என் உயிரே போயிடும். இன்னும் உன் கோழைத்தனம் போகலையே. இதிலெல்லாம் என்ன தப்பு? சிகரெட் பிடிக்கலியா, சினிமா பார்க்கலியா? சினிமாவில் என்னவெல்லாம் காட்டறாங்க'' என்றான் முத்தையா.

''என்ன இருந்தாலும்....'' — சுந்தரம் தயங்கினான்.

''இதெல்லாம் அனாவசியப் பயம். காலேஜுக்கு வந்தாச்சுன்னு 'அப்-டு-டேட்டா' இருக்க வேண்டாமா? எல்லாத்தையும் தெரிஞ்சு வச்சுக்கணும். அனுபவந்தாண்டா பயத்தைப் போக்கும். இதிலே பயப்படறதுக்கு ஒன்றுமே இல்லே. இன்னிக்குத்தான் உன்னுடைய கோழைத்தனம் முழுசா மறையப்போறது. தெரிஞ்சுக்கோ.......'' முத்தையாவின் பேச்சு சுந்தரத்துக்குத் தெம்பைக் கொடுத்தது.

சேச்சே! எவ்வளவு கோழை! எதற்கெல்லாந்தான் பயந்து நடுங்கினேன். முடியைக் கட்டையாக வெட்டிக் கொள்ளப் பயப்பட்டான். சிகரெட்டைப் பிடிக்கப் பயந்தான். சினிமாவிலே தத்ரூபமான காதல் காட்சிகள் வரும்போது கண்களை மூடிக் கொண்டானே! தன்னோடு படிக்கும் மாணவிகளோடு சிரித்து அரட்டை அடிக்கப் பழகுவதற்குள் அவன் பட்டபாடு! அதாவது போகட்டும். பஸ் ஸ்டாப்புகளில் நிற்கும் போது சந்திக்கும் இளம் பெண்களைப் பார்த்து, சினிமாப் பாட்டைப் பாடத் தெரியாவிட்டாலும் சீட்டியாவது ஊதி ரசிப்பதற்குக்கூட முடியாமல் பயந்து நடுங்

கிளுனே; சத்தப் பயத்தாங்கொள்ளி: காலே லீல படிக்கிறதாகச் சொன்ன பொட்டையிலே?

கொஞ்சம் கொஞ்சமாகத் தைரியசாலியாக மாறிக் கொண்டிருந்தவனுக்கு இப்போது என்ன வந்து விட்டது?

அவனுடைய வெகுளித்தனத்தை நீக்கி நாகரிகமானவனாக்க, கோழைத்தனத்தைப் போக்கி வீரனாக்க எத்தனை பேர் அவனைச் சுற்றியிருக்கிறார்கள்! இத்தனை பேர் துணை இருக்கும்போது இந்தப் பட்டணத்தில் அவன் கோழையாக இருப்பானேன்? இது பட்டணத்துக்கே இழுக்கல்லவா?

ஒன்றும் தெரியாத அப்பாவியாக வந்த ஒரு பட்டிக்காட்டானை வீரனாகவும், நாகரிகமானவனாகவும் ஆக்குவதற்கு எத்தனை பேர் மிகுந்த அக்கறையுடன் மூன்று ஆண்டுகளாக ஈடுபட்டிருக்கிறார்கள்! விடுதியை விட்டுத் தெருவில் இறங்கியவுடனேயே சினிமாச் சுவரொட்டிகள் அவன் பார்வையை எவ்வளவு வலிவுடன் கண்டித்திழுத்தன. அதே காட்சிகளை இன்னும் விளக்கத்துடன் தத்ரூபமாகத் திரையில் காட்டி சினிமாக் கலைஞர்கள் அவனை எப்படிப் பக்குவப்படுத்தி விட்டார்கள்! வெளியே போகாத நேரத்தில் அறைக்குள் அவனுடைய உயிர்த் தோழர்கள் அவன் கையில் சிகரெட்டையும், வாயில் சினிமாப் பாட்டையும் கொடுத்துப் பக்குவப்படுத்தினார்கள்! அவனுடைய கோழைத்தனத்தை நீக்கி ஒரு வீரனாக மாற்றிய பெருமை எத்தனை பேரைச் சேர்கிறது!

முத்தையா பாட்டிலின் மூடியைத் திறந்த போது குப்பென்று ஒருவித நெடி பரவியது. சுந்தரம் மூக்கைச் சுளித்தான்.

"சிகரெட்டை முதலில் பழகும்போது இப்படித்தான் ஓடினே. முதலில் ரெண்டு தம் இழுக்கிறவரைக்கும் பயந்து நடுங்கினே. இப்போ எவ்வளவு பிரமாதமா ஊதித் தள்ளுறே? எல்லாம் பழகினாச் சரியாயிடும். சிகரெட்டைத் தொடக்கூட உன் கை நடுங்கிச்சே. இப்போ எவ்வளவு ஸ்டைலா விரலுக்கிடையில் சிகரெட் இருக்கு? நீ வந்த புதுசிலே வெறும் காதல் காட்சியைச் சினிமாவிலே பார்க்கவே கூசினே. இப்போ, டிரஸ் போட்ட படங்களைப் பார்க்கவே பிடிக்கலே உனக்கு" என்றான் முத்தையா உற்சாகத்துடன்.

ஒரு கண்ணாடித் தம்ளரில் கொஞ்சம் தண்ணீர் ஊற்றி அதோடு பாட்டிலில் உள்ளதையும் கலந்து சுந்தரத்திடம் நீட்டினான். சுந்தரம் அதை வாங்கும்போது அவன் கை நடுங்கியது.

முத்தையா இன்னொரு தம்ளரில் மீதமுள்ள திரவத்தைக் கொட்டிக் கொஞ்சம் தண்ணீரும் கலந்து மடமடவென்று வாயில் ஊற்றிவிட்டு தம்ளரை மேஜை மீது வைத்தான். சுந்தரம், கையில் தம்ளரைப் பிடித்தபடி தயங்கி நின்று கொண்டிருந்தான். கஷாயத்தைக் குடிக்கப் பயப்படும் குழந்தையைப் போல் அவன் பார்வை கெஞ்சியது.

"ஒரே மடக்காக வாயில் ஊற்றுடா. கொஞ்சம் கொஞ்சமாக ஊற்றாதே...உம்.." முத்தையா அவசரப்படுத்தினான்.

"வேண்டாண்டா....."

"நீ... கேளுடா, நீ...."

மறுகணம் தம்ளரில் உள்ளதை வீரத்துடன் வாயில் கொட்டிக் கொண்டான், சுந்தரம்.

குபீரென்று தொண்டையில் நெருப்பை அள்ளிப் போட்டது போன்ற உணர்வு தட்டியது. அந்த எரிச்சல் படிப்படியாக உள்ளே இறங்கி வயிற்றில் போய்த் தாக்கியது.

"பேசாமல் படுத்துக்கோ. சுகம்மா இருக்கும். காற்றிலே பறக்கிற மாதிரி இருக்கும். எழுந்திருக்காதே. காலையிலே சந்திக்கலாம்" என்று கூறிவிட்டு முத்தையா வெளியேறினான்.

சுந்தரம் நெருப்பை உள்ளே வைத்துக் கொண்டு திணறினான்.

மனத்தில் எண்ணங்கள் சுழியிட்டன. உடலெல்லாம் எரிந்தது. திடீரென்று ஊர் ஞாபகம் வந்து உறுத்தியது. நினைவு நெஞ்சில் சூறாவளியாகச் சுழன்றது.

மூன்று ஆண்டுகளுக்கு முன் ரயிலடியில் ஓதுவார் "ஜாக்கிரதையாக இருந்துக்கோ" என்று கூறியது காதில் பேரிரைச்சலாக இப்போது ஒலித்தது. மனம் சங்கடப்பட்டது.

அதை நினைத்துத் தனக்குள்ளேயே சிரித்த காலமும் உண்டு.

எதில் ஜாக்கிரதை?

எதையாவது திருடு கொடுத்துவிடுவானா?

பட்டணத்தில் என்ன பயம்? அன்று அப்படித்தான் நினைத்தான்.

ஆனால் உண்மையில் அவனிடமிருந்து திருடு போய் விட்டதே! பறிகொடுத்துத் தானே நிற்கிறான்? மாசிலாமணி ஓதுவாரின் மகன் என்பதற்கு இப்போது அவனிடம் என்ன தகுதி இருக்கிறது?

விபூதி துலங்கிய நெற்றி எங்கே? நெஞ்சில் நிறைந்திருந்த பக்தி எங்கே? களங்கமில்லாத உள்ளம் எங்கே? பண்பு எங்கே? ஒழுக்கம் எங்கே?....

எல்லாம் திருடு போய்விட்டனவே! பறிகொடுத்துவிடாதே என்பதைத்தானே ஓதுவார் சொல்லாமல் சொன்னார், வழி அனுப்பும்போது. அப்போது சிரித்தான். இப்போது அழுவதா...?

முதல் ஆண்டு முடிந்து விடுமுறையில் ஊருக்குப் போனபோது சுந்தரத்தைக் கண்டு ஓதுவார் திகைத்து விட்டார். ஓராண்டுக்குப் பிறகு மகனைக் கண்ட ஆர்வம் ஒரு புறமும், அவன் கோலம் மாறி வந்து நின்ற அதிர்ச்சி ஒரு புறமும் அவரைத் திணற வைத்தன. திருநீறு அணிந்து வேஷ்டி சட்டையுடன் இருந்த சுந்தரத்துக்கும்; இறுக்கமான கால் சட்டையோடும், மிகவும் கட்டையாக வெட்டி விடப்பட்ட கிராப்புத் தலையோடும் வெற்று நெற்றியோடும் 'கௌ பாய்' கோலத்தில் காட்சியளித்த சுந்தரத்துக்கும் எவ்வளவு வித்தியாசம்!

ஓதுவார் ஒரு கணம்தான் மலைத்து நின்றார். மறு கணம் தெளிந்து விட்டார். பட்டணம் போய்ப் படிப்பவனிடம் மன்னார்கோயில் பாணியை எதிர்பார்க்க முடியுமா? நான் தான் பத்தாம் பசலி. என்னுடைய பாதை வேறு, அவனுடைய பாதை வேறு. அதை

அவன்தான் வருத்துக் கொள்ள வேண்டும்.

ஓதுவாருக்கு சுந்தரத்தின் நாகரிகத் தோற்றம் வேடிக்கையாக இருந்தாலும், உள்ளூறப் பெருமையாகவும் இருந்தது.

உடையையும் முடியையும் மாற்றியதில் மட்டும்தானா தைரியசாலி? அவனை அணு அணுவாக அல்லவா முத்தையா தைரியசாலியாக்கினான்! முத்தையாவும் மற்றவர்களும் அதற்காகப் பட்டபாடு! விடுதியிலேயே முற்போக்கானவனாக அல்லவா சுந்தரத்தை மாற்றியிருக்கிறார்கள்!

இறுக்கமான 'கௌபாய்' உடையும், கையில் சிகரெட்டும், வாயில் சினிமாப் பாட்டும், படுக்கையில் நடிகையின் படங்களும்.... அடேயப்பா! எவ்வளவு முன்னேற்றம்!

இந்த முன்னேற்றத்தைத்தான் குப்புசாமி முதலியார் இன்று கண்டார். ஊரில் போய் சொல்வாரோ? ஆனால் செண்பகம் எழுதிய கடிதம் எப்படி அவனை வாட்டி விட்டது! யாரோ பக்கத்து ஊர்க்காரர் அவனைச் சிகரெட்டோடு பார்த்துவிட்டதை ஊரில் போய்ச் சொல்லி யிருக்கிறாராம். செண்பகம் எழுதியிருந்தாளே!

''அண்ணா! நீ எப்படி மாறிவிட்டாய்? நீ சிகரெட் பிடித்ததைப் பார்த்ததாகப் பக்கத்து ஊர் ராமசாமியா பிள்ளை வந்து சொன்னபோது, அப்பா அன்று முழுவதும் சாப்பிடவேயில்லை. ஆனால் நாங்கள் அவர் சொன்னதை நம்பவில்லை. வேறு யாரையோ பார்த்து விட்டு நீதான் என்று நினைத்துக் கொண்டிருப்பார் என்றுதான் நம்புகிறோம். அண்ணா, எல்லோரும் உன்னைத்தான் நம்பியிருக்கிறோம். ஏமாற்றிவிடாதே....''

சுந்தரத்தின் மீதுதான் எவ்வளவு நம்பிக்கை! ஆனால் முதலியாரும் போய்ச் சொன்னால் அப்பா இடிந்தே போய்விடுவார். அவருடைய தூய வாழ்வும், வைதிகமும் அதை எப்படி எடை போடும்?....

அந்தக் குடும்பத்தையே தாங்க வேண்டிய பொறுப்பு அவனுக்கு. ஓதுவார் குடும்பம் என்றால் தலைமுறை தலைமுறையாக நேர்மைக்கும், ஒழுக்கத்துக்கும், கண்ணியத்துக்கும் இருப்பிடம் என்றுதானே இன்றுவரை ஊரில் நினைக்கிறார்கள்.

அப்பா, அம்மா, செண்பகம் எல்லோருமே கண்ணீர் மல்க அவன் முகத்தையே உற்றுப் பார்ப்பது போல் பிரமை தட்டியது. ஒரு கணம் கண்களை மிக்க வேதனையுடன் இறுக மூடிக் கொண்டான்.

'ஐயோ, எப்படி மாறிப்போனேன்! ஒழுக்கமே உயிராக வாழ்ந்த குடும்பத்துக்கு இப்படி ஒருவனா...?

'என்னைப்போல் எத்தனை சுந்தரங்கள் இப்படிச் சுழலில் சிக்கிக்கொண்டனரோ! பண்பை ஒழுக்கத்தை, புனிதத்துவத்தை இழந்துவிட்டு என்ன படிப்பு வேண்டி யிருக்கிறது? எத்தனையோ முத்தையாக்கள், சினிமாக்கள், உயிர்த் தோழர்கள் என்று பெயரில் மிருகங்கள்.

'இப்படிப் படித்து நான் சம்பாதித்துப் போடும் காசை அப்பா தீண்டக்கூட மாட்டாரே... சீச்சீ!'

தன்னையே பரிதாபமாகப் பார்த்துக் கொண்டான். கண்களில் நீர் நிறைந்தது.

வயிறு எரிந்தது. இதுவும் தெரிந்தால் அப்பா உயிரையே விட்டு விடுவார்.

'ஐயோ, எப்படி என்னை இழந்துவிட்டேன்! என்னையே திருடு கொடுத்து விட்டேனே..'

தாங்க முடியாத வேதனை மனத்தை அழுத்தியது. அப்போது, சற்றுத் தொலைவில் உள்ள கோயிலில் பூஜை நடப்பதற்கு அறிகுறியாகக் கண்டாமணி ஒலித்தது.

சுந்தரத்தின் மனத் திரையில் ஒரு காட்சி —

மாசிலாமணி ஓதுவார் கண்களில் நீர்மல்க சந்நிதியில் நிற்கிறார்....

''மெய்தான் வெதும்பி விதிர் விதிர்த்து
உன் விரை ஆர் கழற்கு என்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பி......''

சுந்தரத்தின் உடல் பதறியது. கண்களில் நீர் நிறைந்து முட்டியது. அவசரம் அவசரமாகக் கதவைத் திறந்து கொண்டு குளியலறைக்குள் ஓடினான். விரலைத் தொண்டைக்குள் விட்டு வாந்தி எடுத்தான். அவனுள்ளே சென்ற திரவத்தை மட்டுமல்ல. அவனுள் மூன்று ஆண்டுகளாகப் புகுந்திருந்த நாகரிகத்தை, வீரத்தை, எல்லாப் புதுமைகளையுமே வாந்தியெடுத்துத் துப்பினான். முகத்தைக் குளிர்ந்த நீரில் கழுவிவிட்டு அறைக்கு வந்தான்.

மனச் சுமை இறங்கி யிருந்தது. ஆனால் செய்துவிட்ட வினையின் நினைவு நெஞ்சைத் துளைத்துக் கொண்டிருந்தது. கட்டு மீறிக் கொண்டு வந்த குமுறலை அடக்க முடியாமல் தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதான்!

கண்ணீரில் அழுக்குக் கரைந்து கொண்டிருந்தது.

அழுகைக் குரல் கேட்டு ஒன்றிரண்டு மாணவர்கள் அறையின் வாசலில் வந்து நின்று உள்ளே எட்டிப் பார்த்தார்கள்; முத்தையாவும் வந்து நின்றான்.

''ஏன் அழுகிறாய்?'' — ஒருவன் கேட்டான்.

''கோழை அழுகிறான்!'' என்று கூறி விட்டுப் போனான் முத்தையா.



''ஹலோ! ரகுநாதனா பேசறது? சரி! நான்தான் சக்ரபாணி பேசுகிறேன்!... உங்க வீட்டுக்குப் பக்கத்திலே ஏழுமலை இருக்கிறாரே!...''

''என்ன! அவரைக் கூப்பிடணுமா?''

''ஊஹூம்! அவர் வீட்டுக்குப் பக்கத்து வீட்டிலே விட்டல் ராவ்னு ஒருத்தர்...!''

''ராவைக் கூப்பிடணுமா?''

''இல்லே! அந்த ராவ் வீட்டுக்கு நாலு வீடு தள்ளி கோபாலசாமி அய்யங்கார்னு ஒருத்தர்...!''

''அய்யங்காரைக் கூப்பிட முடியாது; முடியாது; முடியாது! அந்த ஆளுக்கு நான் பத்து ரூபா பாக்கி!''



மாயூரம் உதவி போலீஸ் சூப்பிரின்டென்டென்ட் திரு டி.எம். குருசாமி அவர்களின் புதல்வி சௌ. அகிலமணிக்கும் திருச்சி பாரத் ஹெவி எலெக்ட்டிரிகல்ஸில் உதவி போர்மேனாக பணிபுரிந்துவரும் சிரஞ்சீவி என். ஷண்முகராஜ் அவர்களுக்கும் சமீபத்தில் மாயூரத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்



திருப்பழனம் தமிழ் வித்வான் எம். ஆபத்சகாயம் அவர்களின் புதல்வி செல்வி கமலாவிற்கும், பள்ளத்தூர் பண்டித வித்வான் ஸ்ரீ முத்து வேங்கடாஜலமய்யர் குமாரர் செல்வன் எம். ராஜேஸ்வரன் B. Com.க்கும் சமீபத்தில் திருப்பழனத்தில் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்

# பொன்னிவனத்துப் பூங்குயில்

## கொத்தமங்கலம் சுப்பு

அத்தியாயம் 47

## கோபுரத்தில் ஒரு குயில்



இரவெல்லாம் இளவரசரைக் காணாத துயரத்தில், ''அம்மா, அவர் எங்கே?'' என்று கேட்டுக் குயிலி விம்மி அழுவதைப் பார்க்கச் சின்னத்தம்பிக்குப் பொறுக்கவில்லை.

பையன்கள் எல்லோரும் இளவரசரைத் தேடி வெளியே புறப்பட்டார்கள்.

குயிலியைச் சின்னம்மாள் இள வெந்நீரால் நீராட்டினாள். அரண்மனை விடுதியில் என்ன குறை? குயிலி தன் தலையைத் துவட்டிக் கோடாலி முடிச்சுப் போட்டுக் கொண்டு மேல் வீட்டு அறையில் கண்ணாடியின் முன் நின்றாள்.

சித்திரக்காரர் ரங்கமன்னார் வீட்டில், தான் கற்பரசி சாவித்திரியின் கோலத்தில் நின்றது அவளுக்கு நினைவு வந்தது. அடேயப்பா! அவள் கணவனுக்காக எவ்வளவு போராடினாள் என்று நினைத்தாள். எதிரில் இருந்த குங்குமப் பரணியை அவள் விரல்கள் நாடின. இன்று அப்பொட்டு கொஞ்சம் பெரிதாகவே அமைந்தது. அதைத் திருத்திச் சிறியது ஆக்க அவள் விரும்பவில்லை. மங்களத் திலகம் பெரிதாக இருந்தால் என்ன? அதுவே அழகுதான்!

இந்தச் சமயத்தில் வாசலில் ஏதோ அரவம் கேட்கவே குயிலி பலகணி வழியாக எட்டிப் பார்த்தாள். அழகான ஒரு முத்துப் பல்லக்கிலிருந்து இறங்கினார் அரசி அன்னபூர்ணா தேவியார். இது என்ன, இளவரசர் பிரதாபசிம்மரே பெண் வேடம் பூண்டு வருகிறாரா? என்று ஒரு கணம் திகைத்த குயிலி பின்னர் தனக்குள் சிரித்தபடியே இது அரசி அன்னபூரணா தேவியாகத்தான் இருக்க வேண்டும் எனத் தெளிந்தாள்.

'இது அவருடைய ஏற்பாடுதான். முதலில் அம்மாவை அனுப்பி என்னைப் பார்க்கச் செய்து பிறகு முறைப்படி என்னைத் திருமணம் செய்து கொள்ளத்தான் இந்த ஏற்பாடு!' — குயிலிக்கு வெட்கம் குபீரென்று வந்தது. முகத்தில் குறு வியர்வை வியர்த்தது. அரசியை எதிர்கொண்டு அழைக்க வேண்டிய கடமை தனக்கிருப்பது நினைவுக்கு வந்ததும் விரைந்து கீழே இறங்கிச் சென்றாள்.

கீழே உள்ள மாடிக் கதவைத் திறக்க மங்கை அதன் கைப்பிடியில் கை வைக்கும்போது, ''அன்னையே, அன்னையே! என் உங்களுக்கு இவ்வளவு ஆத்திரம்? என்மீது என்ன கோபம்? நான் வணங்கினால் மகனே என்று வாரி அணைப்பீர்களே! ஏன் இப்போது சும்மா இருக்கிறீர்கள்? பேசுங்கள் அம்மா'' என்று இளவரசர் தாயிடம் கெஞ்சும் குரல் அவள் காதில் கேட்டது. அப்படியே நின்றாள் குயிலி. அவரும் இப்போது தான் வந்திருப்பாரோ என்று எண்ணினாள். ''பிரதாப சிம்மா, நீ பெரியவனாகி விட்டாய். தாசியின் கைபட்ட உன் மேனியை இனி தாய் தீண்டுவாள் என நீ எதிர்பார்க்கலாமா? எழுந்திரு'' என்



றது அன்னபூர்ணா தேவியின் குரல். இதைக் கேட்டுக் கொண்டே மறைவில் நின்ற குயிலியின் தலை சுழன்றது. கால்கள் தள்ளாடின. தான் கட்டிய மனக் கோட்டை சரிவதைக் கண்டாள். கதவைப் பிடித்தபடி தைரியத்தை வரவழைத்துக் கொண்டு நின்றாள்.

"அன்னையே, இதுதானா உங்கள் கோபத்துக்குக் காரணம்! இதற்காகத் தாங்கள் வருந்த வேண்டாம். நானே நேற்று இரவு காவிரி ஆற்றின் நடுவில் படகில் மகாராஜாவைச் சந்தித்தேன். இங்கு நடந்த விஷயங்கள் எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னேன். இளவரசி ஆடும் மயிலை மணக்க முடியாது என்றும் கூறிவிட்டேன்" என்றார் எழுந்து நின்ற இளவரசர். இதைக் கேட்டவுடன், அன்னபூர்ணா தேவி, "ஐயோ, மகனே, என்ன காரியம் செய்துவிட்டாய்?" என்று அலறினார்.

"பிரதாபா, இதைச் சொன்ன பிறகும் மகாராஜா உயிரோடு இருந்தார்களா? அவர்கள் இப்போது உடல் நலமாக இருக்கிறார்களா?" என்று பதறிக் கொண்டே கேட்டார். மாடிப் படியில் இருந்த குயிலி, 'மகாராசாவின் உயிருக்கும் இந்தத் திருமணத்துக்கும் என்ன சம்பந்தம்? ஏன் இப்படி அரசி பதறுகிறார்கள்?' என்று மிகுந்த வேதனையுடன் நினைத்தாள்.

"அம்மா, ஏன் இவ்வாறெல்லாம் பதறுகிறீர்கள்? மகாராஜா எப்பொழுதும்போல இருக்கிறார். 'மகனே, உன்னிஷ்டம் அதுவென்றால் நீ குயிலியையே கல்யாணம் செய்து கொள்' என்றும் கூறிவிட்டார்" என்றார் இளவரசர்.

இதைக் கேட்ட மகாராணி பிரமை பிடித்தவர் போல் வெகு நேரம் நின்றார். பேசுவதற்குக் கூட சக்தியில்லாமல் திணறினார்.

பிறகு, "பிரதாப சிம்மா, வெண்ணெய் இரண்டு வரும் நேரத்தில் நீ தாழியை உடைத்து விட்டாய். உன்னையே நம்பியிருந்த உன் தந்தையின் உள்ளத்தில் எட்டி உதைத்து விட்டாய்! அவர் கனவைக் காவேரியில் கரைத்து விட்டாய். ஐயோ உன்னை மகனாகப் பெற்ற வயிறு பற்றி எரிகிறதடா!" என்று சொல்லிக் கொண்டே நிற்க முடியாமல் அரசமா தேவி ஓர் ஆசனத்தில் சாய்ந்தார்.

"அம்மா!" என்று தூக்கப் போனார் இளவரசர். "நில்! என்னை உன் கையால் தொடாதே. பிரதாப சிம்மா! என்னாலும் உன்னாலும் தஞ்சை அரசுக்கு இடையூறு வரக் கூடாது என்ற காரணத்துக்காகவே நான் மகாதேவபட்டணத்தில் ஏகாங்கியாக என் கணவரையும் பிரிந்து தனிமையில் வாழ்ந்தேன். அதற்காகவே உனக்குப் பட்டம் வேண்டாம் என்றும் அபுரூபா பாயிடம் உறுதியளித்தேன். ஓர் அரசின் நன்மைக்காக ஒரு தாயும் மகனும் தங்கள் வாழ்வைத் தியாகம் செய்வது கடமை என்று எண்ணினேன். ஆனால் நீ என் லட்சியங்களை எல்லாம் தகர்த்து விட்டாய்!"

"நீங்கள் இவ்வளவு நொந்துகொள்ளும்படியாக நான் என்ன செய்துவிட்டேன், அம்மா?"

"இதற்கு மேல் என்ன செய்ய வேண்டும் பிரதாபசிம்மா! ஆதி முதல் நீ வஞ்சகனாகவே இருந்திருக்கிறாய். தனக்குக் கிடைக்காத பாலைப் பூனை தட்டிக் கவிழ்ப்பது போல தஞ்சை அரசை மகாராஷ்டிர மன்னர் பரம்பரைக்கே இல்லாமல்செய்துவிட எண்ணியிருக்கிறாய்."

"ஐயோ, அம்மா! அப்படிச் சொல்லாதீர்கள். உங்கள் மேல் ஆணையாக நான் ஒரு தவறும் செய்துவிடவில்லை. ஒருவருக்கும் துரோகம் செய்யவில்லை!" என்று தன் காதுகளைப் பொத்திக் கொண்டு கதறினார் இளவரசர்.

"அப்படியில்லையென்றால் நீ ஏன் உன் தந்தை சொன்னவுடன் திருச்சி இளவரசியை மணக்கவில்லை? நீ ஏன் அவளை மாறு வேடத்தில் வந்து வம்புக்கு இழுத்தாய்? ஏன் அவளை சபை நடுவில் அவமானம் செய்தாய்? தந்தையும் தாயும் இங்கு வந்திருப்பதையும் மதிக்காமல் ஏன் தாசியின் வீட்டோடு கதியாகக் கிடக்கிறாய்? ராணி மீனாக்ஷி தேவி உன் கபட நாடகத்தைத் தெரிந்து கொண்டு விட்டாள். அந்தத் தாசியை விட்டால்தான் தன் மகளை உனக்குத் தருவேன் என்கிறாள். அடே, பிரதாபசிம்மா! நீ அரசன் மகன். அரசைக் காக்க வேண்டியவன். இளவரசியை நீ மணந்தால் இரு நாடும் ஒன்றாக ஆகும். இரண்டு நாட்டு மக்களும் சேர்ந்து படையெடுத்து வரும் ஆர்க்காட்டு நவாபின் படைகளை எதிர்ப்பார்கள். அப்பொழுதுதான் காவிரியும் வைகையும் காக்கப்படும். அறம் வளர்த்த நாயகியும் அன்னை மீனாக்ஷியும் காக்கப்படுவார்கள். என்ன சொல்கிறாய், மகனே! உன் மனத்தில் வஞ்சனையில்லையேயானால் அந்தத் தாசியை விட்டு விடு. அரசியின் மகளைக் கல்யாணம் செய்து கொள்" என்று அடி வயிற்றிலிருந்து அனல் கக்குவதைப் போல் வார்த்தைகளைக் கொட்டினாள் அன்னை.

"அம்மா. அது முடியவே முடியாது. குயிலி தாசியல்ல. அவள் தாசி

சென்னை.

## வெலிங்டன் • ஸ்ரீமுருகன்
## சரஸ்வதி • • • தங்கம்

மற்றும் தென்னாடெங்கும்




## மல்லியம் புரொடக்ஷன்ஸ்

# ஜீவனாம்சம்

கதை, வசனம், டைரக்ஷன் :

## மல்லியம் ராஜகோபால்



உலக உரிமையாளர்கள் :-

**வெங்கடேஸ்வரா மூவீஸ்,** 7, முதல் கிராஸ் ரோட், ஸ்ரீராம்நகர்-சென்னை-18.

ELEGANT

குலத்தில்தான் பிறந்தாள். ஆயினும் குலமகளாக நினைக்கிறேன். முன்னேற நினைக்கும் ஒருத்தியை மறுபடியும் பாதாளத்தில் தள்ளச் சொல்கிறீர்களா?'' என்று ஆவேசத்துடன் கேட்டார் இளவரசர். இந்த ஒரு வார்த்தையில் குயிலியின் சோகமெல்லாம் எங்கோ ஓடியது. கதவைத் திறந்து கொண்டு ஓடிப் போய் ''இளவரசே!'' என்று அவர் காலில் விழ வேண்டும் என்று தோன்றியது.

அப்போது, ''பிரதாபா! ஒருத்தி முக்கியமா? ஒரு நாடு முக்கியமா? அவளைத் தள்ளக் கூடாது என்றால் அரசைப் படுகுழியில் தள்ளலாமா? தாசியிடம் காட்டும் பரிவை உன் தாயின் மேல் காட்டக் கூடாதா மகனே! உன்னைப் பத்து மாதம் கருவில் சுமந்தவள் நான். கர்ப்பக்கிரகங்களை இடிய விடாதே. உன்னைச் சீராட்டித் தாலாட்டுப் பாடியவள் நான். தேவாரத் திருவாசகங்களை அழிய விடாதே.....! உன்னையும் என்னையும் ஒரு கொடியின் கீழ் காப்பாற்றினார் உன் தந்தை. கோயிலின் கொடிக் கம்பங்கள் தூளாக விடாதே. உன் தந்தையின் தாள்களைத் தவிர, வேறு யார் காலிலும் நான் விழுந்ததில்லை. மகனே, இப்போது உன் காலில் விழுகிறேனடா! இந்தத் தாசியை விட்டுவிடு. உன் தந்தையைக் காப்பாற்று. பெற்ற தாயைக் காப்பாற்று. பிறந்த நாட்டைக் காப்பாற்று'' என்று கதறிக் கொண்டே தன் மகனின் காலடியில் பத்து மாதம் சுமந்து பெற்ற தாய் பணிந்தாள். இதைக் கேட்டுக் கொண்டிருந்த குயிலி குலுங்கிக் குலுங்கி அழுதாள். சத்தம் வெளியே கேட்டு விடாமல் இருக்கத் தன் வாயை இறுகப் பொத்திக் கொண்டாள்.

''அம்மா, அம்மா!'' என்று துடித்தார் இளவரசர். தாயைத் தன் இருகரங்களாலும் தூக்கினார். பக்கத்திலிருந்த மஞ்சத்தின் மீது உட்கார வைத்தார். தாய் மகன் முகத்தையே பார்த்தாள். மகனும் தாயின் முகத்தையே பார்த்தார். ஒரு கணம், இரண்டு கணம் ஏன், அறுபது விநாடிகள் அப்படியே சென்றன. இளவரசர் ஒரு முடிவுக்கு வந்தார். சரேலென்று தம் இடையிலிருந்த உடை வாளை உருவினார். ''அம்மா! என்னை நீங்கள் அரசனாக வளர்க்கவில்லை. சாதாரண மனிதனாகவே வளர்த்தீர்கள். என்னை நீங்கள் காவலனாக வளர்க்கவில்லை. கலைஞனாகவே வளர்த்தீர்கள். அவள் குரலை முதலில் ஒரு நாள் குதிரை வண்டியில் கேட்டேன். அப்பொழுதே அதற்கு



''நான் தூங்கி எழுந்ததும் முதலில் என் முகத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொள்வேன்.''

''அதனால்தான் ஆபீசுக்குக் கூட கண்ணாடியை எடுத்துக்கொண்டு போகிறீராக்கும்?''

அடிமையானேன். அவள் பாட்டை ஆற்றங் கரையில் கேட்டேன். அப்பொழுதே அந்த இசை வெள்ளத்தில் விழுந்தேன். அவளோடு இரண்டு மாதம் இணை பிரியாது பழகினேன். அவள் உயர்ந்தவள் என்பதை அறிந்தேன். அவளை என் காதலி என்று ஏற்றுக் கொண்டு விட்டேன். அந்த வாக்கை அழிக்காதீர்கள். அவளை விடுவதைக் காட்டிலும் என் உயிரை விடச் சொல்லுங்கள். நான் விட்டு விடுகிறேன். இளவயதில் என் மனம் இனிக்க இனிக்க அரிச்சந்திரன் கதையைச் சொல்லிச் சத்தியத்தை அறிமுகப்படுத்தியவர்கள் தாங்கள். இன்று என்னைச் சத்தியத்தை மீறச் சொல்கிறீர்களா? தாயே, அதைச் சொல்லாதீர்கள். அதைவிடத் தாங்கள் கொடுத்த உடலைத் தாங்களே அழித்து விடுங்கள். இந்தாருங்கள், என் உடைவாள்!'' என்று பல எதிரிகளின் மார்பைப் பதம் பார்த்த தம் உடைவாளை — தர்மத்தை ரட்சிப்பதற்காக அதர்மத்தை அழித்தே பழகிய அந்த ஆயுதத்தை — அன்னையின் காலடியில் வைத்தார் இளவரசர். குயிலி மூச்சுவிடக்கூட முடியாமல் நின்றாள். தாய்க்கும் சிறிது நேரம் மூச்சு வரவில்லை. அந்தச் சுவர்கள்கூட சற்று நேரம் கதிகலங்கிப் போய் நின்றன. அந்த வாளை எடுத்துக்கொண்டாள் அன்னை.

'' மகனே, இது தர்மத்தைக் காக்கும் வாள். உன் உடம்பில் தாய்ப் பால் ஊட்டிய சக்தி இருக்கும் வரையில்

இந்த ஆயுதத்தால் அறத்தை நீ காப்பாற்று. மகனே, நாம் இருவரும் இப்போது இக்கட்டான நிலையில் இருக்கிறோம். உன் வாதத்தில் காதல் இருக்கிறது. என் வாதத்தில் கடமை இருக்கிறது. இரண்டும் புனிதமானவை. இதில் எதைப் பின்பற்றுவது என்பதை நாம் சொல்ல முடியாது. இம்மாதிரியான தர்மசங்கடங்கள் ஒவ்வொருவர் வாழ்விலும் வரும். அப்பொழுது அதற்குரிய பாதையைத் தர்மம்தான் சொல்லும். அதைத் தாயும் சொல்ல முடியாது. மகனே, உன் இஷ்டம். விதிவிட்ட வழி விடட்டும்'' என்று சொல்லி விட்டுத் தாய் மகனை அணைத்து முத்தமிட்டாள். இதைக் கேட்டுக் கொண்டே மெல்ல மாடிப் படிகளில் ஏறினாள் குயிலி. அவள் உள்ளத்தில் பலப் பலவிதமான உணர்ச்சிகள் கொந்தளித்தன. இன்பமும் துன்பமும் ஒரே சமயத்தில் அளவு மீறிப் பெருகப் பரிதவித்தாள் பேதை.

இளவரசர் வரும் சத்தம் கேட்டது. துயர ரேகைகள் தன் முகத்தில் படர்ந்திருக்கிறதா என்று ஒரு முறை கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள் குயிலி. ''என்ன குயிலி, எப்பவும் கண்ணாடி முன்தானா நிற்பாய்?'' என்று கூறிக் கொண்டே அருகே வந்தார் இளவரசர்.

''கண்ணாடி கருத்தையும் காட்டுமா, என்ன?'' என்று திரும்பினாள் குயிலி. பொய்யாகச் சிரித்தாள்.

''ஏன் உன் கண்கள் கலங்கியிருக்கின்றன?'' என்றார் அவர்.

''நேற்று போனவர் வராமல் இருந்தால் கண் கலங்காதா?'' என்றாள் அவள். இதுவும் பொய்தான்.

இளவரசர் அவள் அருகில் வந்தார். ''இவ்வளவுதானே! இனி மேல் உன்னை விட்டுப் பிரியவே மாட்டேன்'' என்று தழுவிக் கொண்டார் அவளை.

அன்று முழுவதும் அவரை விட்டுப் பிரியாமல் இருந்தாள் குயிலி. ''எங்கே சிங்கா, 'கனவிலும் உன்னை மறவேன்' என்ற காம்போதி பதத்தைப் பாடு'' என்றாள் குயிலி. அவர் பாடினார். அவள் அற்புதமாக ஆடினாள் — மாலை வரையில். அடிக்கடி அம்மாவைப் பார்க்கும் குழந்தையைப் போல் அவரைப் பார்ப்பாள். கதவு மூலையில் நின்று ஏங்குவாள். கண்ணீர் விடுவாள். உடனே அவர் அறியாமல் துடைத்துக் கொள்வாள்.

''நீ ஒரு கொம்பாகி விடு. நான் ஒரு குயில் ஆகிவிடுகிறேன். ஒரு மலராகி விடு. நான் வண்டாகிவிடுகிறேன். நீ மரமாகி விடு. நான் பேயாகி விடுகிறேன்'' என்றாள் குயிலி.

பாவம் இளவரசர்; அவளுடைய ஆயாசம் புரியாமல், ''ஏன், மனிதர்களாக இருக்க உனக்கு ஆசையில்லையா?'' என்று கேட்டார்.

''இல்லை சிங்கா! மனிதன் மனத்துக்கு அடிமை. அது ஒரு குரங்கு. ஒரு கிளையில் இருக்காது. கிளைக்குக் கிளை தாவும்'' என்றாள் குயிலி.

''ஆனால் என் குயிலி குரங்கல்ல. குரங்கிருந்த கொம்பு ஆடும். குயில் இருந்த கொம்பு பாடும்'' என்று கூறி விட்டு இளவரசர் குயிலியின் கன்னத்தில் தன் காதலை வரைந்தார். குயிலி மெய்ம்மறந்து கண்ணீர் விட்டாள். தழுவிய கரத்தை விலக்காமல் தம்பம் போல் நின்றாள். ஆம், கல்லானாள்.

இளவரசர் சென்றவுடன் குயிலி சட்டாம் பிள்ளையை அழைத்துக் கேட்டாள்: ''ஏலே, உனக்கு ஓலை எழுதத் தெரியுமில்லே?''

''ஓ! தெரியுமே! ராமாயணத்தையே மூணு நாளிலே எழுதுவேன் அக்கா'' என்றான் அவன்.

''அப்படியானால் எழுது'' என்று ஓலையின் வாசகத்தைக் கூறினாள் குயிலி. அதை எழுதும் போதே சட்டாம் பிள்ளையின் கை நடுங்கியது. எழுத்தாணி குத்தியது. அவன் கண்களிலிருந்து பொல பொலவென்று கண்ணீர் பெருகியது. ஆனால் குயிலி கலங்கவில்லை. கடமை அவளைக் கல்லாக்கியிருந்தது.

''மகாராணியாருக்குக் குயிலி தண்டனிட்டு எழுதும் ஓலை. நான் எழுதும் ஓலை நம்மிருவருக்கும் மட்டுமே தெரிந்த ரகசியமாய் இருக்கட்டும். தாங்களும் இளவரசரும் பேசிக்கொண்டிருந்ததெல்லாம் இந்தப் பாவியின் காதுகளில் விழுந்தன. 'உயிரை விட்டாலும் விடுவேன். குயிலியை விடமாட்டேன்' என்று இளவரசர் சொன்னாரல்லவா? அதுவே எனக்குப் போதும். காதலனின் நன்மைக்காக ஒருத்தி தன் காதலைக்கூட விட்டுக் கொடுக்கவில்லை என்றால் அவள் பெண்ணல்ல! நான் ஒழிகிறேன்; நாடு வாழட்டும்! நான் உங்களிடம் கேட்பது ஒன்றே ஒன்றுதான். அது, நான் தாசியல்ல, உங்கள் மருமகள் என்பதைத் தாங்கள் உணர வேண்டும் என்பதுதான். நான் போய் வருகிறேன். உங்கள் மகன் உங்களிடம் வந்து விடுவார். இது உறுதி. வணக்கம்.

—— குயிலி''

இந்த ஓலையைப் படித்து முடித்த மகாராணியின் கரங்கள் தலைக்கு மேலே உயர்ந்தன. ''மகளே! இனி எனக்கு எத்தனை மருமகள்கள் வந்தாலும் நீதான் என் உண்மையான மருமகள். மிகப் பெரிய தியாகம் புரிந்த உன்னைக் கும்பிடவே ஆசைப்படுகிறேனம்மா'' என்று முணு முணுத்தன அன்ன பூர்ணாதேவியாரின் அதரங்கள்.

# GRASIM

## STAPLE FIBRE A SUPPLEMENT TO COTTON AND OTHER FIBRES



**Among Indian technological achievements Gwalior Rayon's success in producing Rayon Grade Pulp from indigenous raw materials without any foreign aid or collaboration has, perhaps, been the most remarkable.** The staple fibre produced from the pulp has been a boon to the hard-pressed textile industry which was deprived of valuable raw materials when vast areas of cotton-growing land were lost to Pakistan as a result of Partition.

Grasim Staple Fibre is unique in many respects, and is, in effect, a supplement to all natural fibres including cotton, wool, silk, jute, as well as to synthetic fibres. When blended or mixed with other fibres, it increases the usefulness of the resultant fabrics, making them cooler, softer, and more comfortable while at the same time helping to lower costs.

Today Gwalior Rayon contributes substantially to the national economy. It keeps hundreds of textile mills busy, gives employment to thousands of people, helps clothe lakhs more, saves crores of rupees in foreign exchange, contributes handsomely and in ever-increasing amounts to the national exchequer—these are just a few of the calculable benefits.

Besides Rayon Grade Pulp and Staple Fibre, Gwalior Rayon also produces high quality fabrics and fabricates its own machinery and equipment.

As the needs of the nation for the basic necessities of life are constantly growing, Gwalior Rayon, conscious of its responsibilities, has already made plans to expand its production. It is the constant endeavour of the Company to serve the country to its utmost ability.

**THE GWALIOR RAYON SILK MANUFACTURING (WVG.) CO. LTD.**

Birlagram, Nagda.

முதல் வேலையாக அன்னபூர்ணா தேவியார் மகாராணி மீனாக்ஷியைக் காண விரும்புவதாகத் தெரிவித்தார். மகா ராணி வந்தவுடன் அவரிடம், ''என் பிள்ளை அந்தத் தாசியின் வலையிலிருந்து விலகி விடுவான். தாங்கள் அவசரப்பட்டு எந்த முடிவும் எடுக்க வேண்டாம்'' என்று கேட்டுக்கொண்டார். மகாராணி மீனாட்சிக்கு இந்த வார்த்தை வயிற்றில் பால் வார்த்தது போல் இருந்தது. ஆனால் அன்னபூர்ணாதேவியோ தன் வயிற்றில் அனல் பற்றியது போல் ஏனோ துடித்தார்?

நடுவிலே மாணிக்கம் பதித்து சுற்றிலும் கமலம் இழைத்த மாங்காய் மாலை ஒன்றைக் குயிலியிடம் கொடுத்து, ''அக்கா, இதை இளவரசர் உனக்காகக் கொடுத்து அனுப்பிச்சாராம். இப்பொழுதுதான் ஓர் உத்தியோகஸ்தர் என்னிடம் கொண்டு வந்து கொடுத்தார்'' என்றான் முந்திரிக்கொட்டை.

சின்னத் தம்பியும் மற்றவர்களும் அவள் அதை அணிந்து பார்க்க வேண்டும் என்று வற்புறுத்தினார்கள்.

''எனக்கு எதுக்கடா தம்பி, இதெல்லாம்? இந்த மாலை இல்லாமலே நான் அழகாய் இருப்பேண்டா!'' என்று சலிப்புடன் கூறினாள் குயிலி. ஆம், தியாகத்தின் அழகும் சேர்ந்து குயிலி மங்கல தீபம்போல் தோன்றினாள்.

''குயிலி, இதை நீ கழுத்திலே போட்டுக்க. நூறு என்றதுக்குள்ளே அவர் வந்துடுவார்'' என்று ஜோசியம் கூறினாள் சின்னம்மாள். குயிலிக்கு அடி வயிற்றிலிருந்து ஒரு பெருமூச்சு வந்தது. அவள் மனத்தில் ஏதோ ஒரு குரல், 'மாங்கல்யம் இட்டால்தானா? மாங்காய் மாலைதான் ஓர் அடையாளமாக இருக்கட்டுமே' என்று கூறியது. குயிலி அதை இயந்திரம் போலத் தன் கழுத்தில் உணர்ச்சியற்றவளாக அணிந்து கொண்டாள். பையன்கள் எல்லாரும் ஆனந்தம் தாங்காமல் சிரித்தார்கள்.

மெல்ல எழுந்து உள்ளே சென்றாள். கண்ணாடியின் முன் நின்றாள். அந்த மாலையிலிருந்த மாணிக்கங்கள் அத்தனையிலும் இளவரசரின் முகம் தோன்றியது. 'உனக்கு எவ்வளவு துணிச்சல்! குயிலி, செய்வதை யோசித்துச் செய்' என்று கூறியது. அவளுடைய கண்ணீர் மாலையின் மீது சிந்தி அந்த முகங்களை மறைத்தது. ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவள் போல் காணப்பட்டாள் அவள்.

அணைக்கரை அருகில் இரு புரவிகள் வேகமாக வந்து கொண்டிருந்தன. காலையில் குயிலியுடன் புறப்படுவதற்காகப் படகுக்கு ஏற்பாடு செய்துவிட்டு இளவரசரும், சர்க்கரையும் வரும் குதிரைகள்தாம் அவை. அங்கு இருந்த கல் தரையில் ஓட முடியாமல் அக்குதிரைகள் சிறிது மெதுவாக நடந்தன.

''இளவரசே, நீங்கள் உத்தரவு கொடுத்தால் என் மனத்தில் உள்ள ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன்'' என்றான் சர்க்கரை.

உத்தரவு கிடைத்ததும் மேலே பேசினான்: ''தாய் தந்தையே சம்மதம் கொடுத்தாலும் தாங்கள் தாசியை மணப்பது சரியல்ல. தாசிகள் அமாவாசை இருளைப் போல இதயமற்றவர்கள். மற்றவர்களுக்கு வாய் பேசும், அவர்களுக்கோ கண்ணும் கையும் பேசும்.''

''அப்படியென்றால்?''

''அழகும் காசும்தான் பேசும். அவர்கள் கால் ஓர் இடத்தில் ஊன்றி நிற்காது. எப்போதும் ஆடிக்கொண்டே இருக்கும். அவர்களுக்கு ஒரு நாளைக்கு நூறு பேர் மாலை போட வேண்டும்.''

''அதாவது....?''

''ஒருவனை நம்பி ஒருவனது மாலையில் திருப்தி அடைய மாட்டார்கள்.''

''என் குயிலி அப்படிப்பட்டவள் அல்ல.''

''பாம்பில் குட்டி கிடையாது. பரத்தையில் பத்தினி கிடையாது'' என்றான் சர்க்கரை.

அவன் எதிர்பாராத விதமாக இளவரசரின் வலக்கரம் பளீரென்று அவன் கன்னத்தில் அறைய முன்வந்தது. இதைப் பார்த்துச் சர்க்கரை திடுக்கிட்டான். ஆனால் அவர் தன் சாட்டையால் குதிரையைப் பளீரென்று வைத்தார். திருச்சியை நோக்கி விரைந்தார்.

சர்க்கரையின் விழி கலங்கியது. அடிபட்ட நண்பனும் அடிபட்ட நாயும் விலகிப் போய் விடுமா என்ன? சர்க்கரையும் அவர் கூடவே தொடர்ந்தான்.

''குயிலி, குயிலி!'' என்று கூப்பிட்டுக் கொண்டே மாடி அறைக்கு ஓடினார் இளவரசர். அறை வெறிச்சிட்டிருந்தது. அங்கே குயிலியைக் காணோம். ஆனால் ஒரு முக்காலியின் மீது ஓர் ஓலையும் அதன் மேல் அது காற்றில் பறக்காமல் இருப்பதற்காக அவர் தலை பொறித்த மோகராவும் வைக்கப்பட்டிருந்தன. ஆவலோடு எடுத்தார் இளவரசர். படித்தார். அவர் தலை சுழன்றது. தாம் படிக்கிறோமா அல்லது தமக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா என்ற ஐயத்தில் இரு கையாலும் கண்களைக் கசக்கிக் கொண்டு படித்

தார். ''இளவரசே! நான் தாசி. எனக்கு வேண்டுவது செல்வம். நீங்கள் அரச பதவிக்கு வர முடியாதவர். என் வாழ்க்கையின் நலத்தை உத்தேசித்து நான் தஞ்சைக்கு வருங்காலத்தில் அரசராகப் போகும் காட்டு ராசாவிடம் சென்று விட்டேன். நீங்கள் கற்றுக் கொடுத்த வித்தைக்கு நன்றி. குயிலி.''—என்று எழுதப்பட்டிருந்தது. திகைத்தார். இப்படியும் நடக்குமா என்று எண்ணினார்.... ''அம்மா!'' என்று அலறித் தரையில் விழ்ந்தார்.

''நான்தான் அப்பொழுதே சொன்னேனே!'' என்றான் சர்க்கரை.

''நண்பா, என்னை மன்னித்துவிடு. நீயும் சொன்னாய், தாயும் சொன்னாள், ஓவியரும் சொன்னார், உலகமும் சொல்லியது. நான்தான் மோசம் போய்விட்டேன்'' என்று அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு கதறினார் இளவரசர்.

இரவு நடுநிசி. காவிரிக் குளிரில் எல்லாரும் துப்பட்டியால் இறுகப் போர்த்திக் கொண்டு படகைத் தள்ளினார்கள். ஆனால் அன்னபூர்ணாதேவியின் மடியில் தலை வைத்துப் படுத்திருந்த இளவரசரின் நெற்றி தணல் போல் கொதித்தது. ''அம்மா, நான் நம்பி மோசம் போய் விட்டேனம்மா. உலகத்தில் எல்லோரும் நல்லவர்கள் என்று எண்ணினேன் அம்மா!'' என்று வாய் ஓயாமல் புலம்பிக் கொண்டிருந்தார் இளவரசர். வாய் திறவாமல் அதைக் கேட்டு உள்ளத்தில் புழுங்கிக் கொண்டிருந்தார் அன்னபூர்ணாதேவியார். அரண்மனைப் படகு தஞ்சையை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது.

அடுத்த நாள் திருச்சி அரண்மனை அல்லோலகல்லோலப்பட்டது. ஆறாயிரம் வராகன் விலையுடைய மாலை ஒப்பனை அறைக்குள்ளிருந்து காணாமல் போய் விட்டால் சும்மா இருக்க முடியுமா? ஊழியர்கள் பலர் சின்னப் பெருமாளால் கைது செய்யப்பட்டார்கள். யாராயிருந்தாலும் தயை தாட்சண்யம் பாராதே என்று அரசி உத்தரவிட்டாள். வந்தவர்கள் யார் யார்? சந்தேகப்படக் கூடியவர்கள் யார் யார்? என்ற ஜாபிதா எடுக்கப்பட்டது. ''ஒரு வேளை அந்தக் குயிலியின் ஆட்கள் எடுத்திருப்பார்களோ?'' என்றான் கொத்தவால்.

''குயிலி என்ன? கருடனே கொத்திக் கொண்டு போயிருந்தாலும், கொண்டு வர வேண்டும்'' என்று உத்தரவிட்டார் மாமா.

குயிலி இருந்த ஜாகை வெறுங்கூடாகக் காட்சியளித்தது. அவளும் இல்லை. பக்கவாத்தியக்காரர்களும் இல்லை. அவள் போன அடித்தடத்தைப் பார்த்துக் கொத்தவால் புறப்பட்டான்.

கழுத்தில் மாலையோடு, களவுப் பொருளோடு ஆசாமி கிடைத்தால் விட்டு விடுவார்களா? விலங்கிட்டு இழுத்துவரப்பட்டாள் குயிலி. இழுக்காமலே வந்துவிட்டார்கள் அவள் கூட்டத்தினர். ஆனால் குயிலிக்கோ விலங்கு வலிக்கவில்லை. வெயில் உறைக்கவில்லை.

முதல் நாள் எந்த அரண்மனையில் ஆடிப் பாடிப் பாராட்டுகளைப் பெற்றாளோ அதே இடத்தில் இன்று கைவிலங்குகளுடன் சோறு தண்ணீர் இல்லாமல் ஓர் அறையில் அடைக்கப்பட்டாள் குயிலி.

''திருட்டு நாயே, இளவரசியின் நகையைத் திருட உனக்கு எத்தனை திமிர்?'' என்று கத்தினான் சின்னப் பெருமாள்.

குயிலி சிரித்தாள். மேலும் சிரித்தாள். விடாமல் சிரித்தாள். விழிநீர் பெருகும் வரை சிரித்தாள்.

''ஏன் சிரிக்கிறாய்? சொல்!'' என்று அதட்டினான் சின்னப்பெருமாள்.

''என்னை ஏன் ஐயா, கேக்கறே? உனக்கு அது தெரியாதா? ஆற்றிலே முதலை அடியில் கிடக்கும். அரண்மனை முதலை மேலேயே கிடக்கும். உலகத்திலே உள்ள பொய், சூது, வஞ்சகம் புனைசுருட்டு எல்லாம் ஏழைகள் வீட்டிலே பொறக்கிறதில்லே. ஐம்பெரும் பாதகங்களுக்கும் அரண்மனைதான் பிறப்பிடம். தரும புத்திரன் சூதாடினது அரமனை. திரௌபதியைத் துகில் உரிந்தது அரமனை. ராமனைக் காட்டுக்கு ஓட்டியது அரமனை. நேற்று நான் தோற்க வேணும் உன் மருமகள் ஜெயிக்க வேணும் என்று, அத்தனை பேரும் இருக்கிறப்ப ஆடுகிற மேடையில் ஆமாக்கு எண்ணெயை ஊத்தினதும் அரமனைதான். நான் ஜெயித்து விட்டேனே என்ற ஆத்திரத்திலே மாங்காய் மாலையை ஆளை விட்டுக் கொடுத்தனுப்பிவிட்டு என்னையே திருடி என்று பிடித்ததும் அரமனைதான். ஐயா அமைச்சரே, என் குலத்தைச் சேர்ந்தவங்க பணத்துக்காக உடலை விற்கிறாங்க. உன்னைப் போன்றவங்க பணத்துக்காக உள்ளத்தை விற்கிறீங்க! இதோ பாருங்க, நான் வாழ்க்கையையே விரும்பாதவள். உன் மாங்காய் மாலைக்கு ஆசைப்பட மாட்டேன். என்னை நீ கொல்லு, உதை, பட்டினி போடு, என்ன வேணும்னாலும் செய்..... ஆனால் இவங்க எல்லாரையும் விட்டு விடு. பாவம், அவுங்க ஏழைகள். அவுங்க அழுதால் அந்தப்

கண்ணீரில் அரண்மனைச் சுவர் எல்லாம் பாளம் பாளமாக வெடித்து விடும்.''

''சீ! நிறுத்து. ராஜத் துரோகி! டேய், கூப்பிடு கொலையாளியை. அவளுடைய மூக்கையும் நாக்கையும் அறுத்து விடச் சொல்'' என்று சின்னப் பெருமாள் உத்தரவு போடும் போது கதவு படபடவென்று தட்டப் பட்டது. கதவைத் திறந்தான் ஒருவன்.

''அமைச்சர் அவர்களை மகாராணியார் உடனே அழைக்கிறார். அவசரம்!'' என்றாள் ஒரு தோழி.



''எம்பா! இந்தச்சின்னக்கணக்கும் போடறதுக்கே இப்படிக் கஷ்டப் படறியே! அப்புறம் நான் ஆறும் க்ளாஸ் - ஏழாம் க்ளாஸ் எல்லாம் போனா, என்ன பண்ணுவே?''

''தண்டனையை நிறைவேற்ற வேண்டாம். சற்று இருக்கச் சொல்.'' என்று அமைச்சர் விரைந்தார் அந்தப் புரத்தை நோக்கி.

ஆம், அங்கு ஓர் எதிர்பாராத சம்பவம் நடந்து விட்டது. ரங்கமன்னாரின் சாவித்திரி படமே இதற்குக் காரணம்.

பரிசு பெற வந்திருந்த படங்களுக்குள் அதுதான் உயர்வாக இருந்ததால் ராணியின் பார்வைக்கு அது அனுப்பப்பட்டது. ரங்கமன்னாரும் வந்திருந்தார்.

பட்டுத்திரைக்குள்ளே - படத்தைப் பார்த்த அரசி வைத்த கண் வாங்காமல் பார்த்தபடியே நின்றாள்.

அவள் பார்க்கும் ஒவ்வொரு கூடுதல் கணமும் ஒரு நூறு பொன்னை அதிகம் பெற்றுத் தரும் என்று ஓவியர் மகிழ்ந்தார்..... ''ஓவியரே. இந்த முகம்....'' என்று இழுத்தாள் ராணி. அவள் மனத்தில் சிறு வயதில் தம்மை விட்டுப் பிரிந்து சென்ற அந்தக் குழந்தையின் முக ஜாடையும் இதுவும் ஒன்றாகத் தோன்றியது.

''ஆம், அருமையான முகம். சாமுத்ரிகா லட்சணப்படி சாவித்திரிக்குப் பொருத்தமான முகம் ஒன்றைத் தேடி பல நாள் அலைந்தேன் நான்.''

''அப்படியானால் இந்த முகம் உயிரோடு இருக்கும் ஒரு பெண்ணின் முகமா?'' என்று ஆவலுடன் கேட்டாள் அரசி.

''ஆமாம், அரசியாரே! நேற்று உங்கள் சபையில் ஆடிய குயிலியின் முகம்தான் இது.''

''என்ன குயிலியா? என் சபையில் ஆடியவளா? ஐயோ, நேற்று நான் நாட்டியம் பார்க்கத் தர்பாருக்குச் செல்லவே இல்லை. உண்மையிலே குயிலியின் படமா இது?''

''ஆம். அரசி.''

''நீங்கதான் அவளை வைத்துப் படம் எழுதி இருக்கிறீர்களே. நன்றாகப் பழகி இருப்பீர்களல்லவா?''

''ஆம். என் வீட்டிலேயே என் மகள் போல் பல நாட்கள் இருந்தாள்.''

''அவளுக்கு உடலில் மரு மச்சம் ஏதேனும்..?''

''அப்படி ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. தவிர ஒரு பெண்ணின் உடம்பில்...? ஆ! இப்ப ஞாபகம் வருகிறது. என் மனைவி சொன்னாள். அவளுடைய கையில் முழங்கைக்கு அருகே ஒரு தழும்பு.''

''தழும்பா? இடது கையில்தானே?'' என்று அரசி ஆச்சரியத்தோடு கூவி, அவர் பதிலுக்குக் காத்திராமல் எழுந்தார். அருகில் இருந்த சேமக்கலத்தைத் தட்டினார். உடனே அங்கு ஓடிவந்த பணிப் பெண்ணிடம், ''ஓடு. உடனே சின்னப் பெருமாளை நாம் அழைப்பதாகச் சொல்.'' என்று உத்தரவிட்டார்.

சின்னப் பெருமாள் வந்தவுடன் அந்தப் படத்தைக் காட்டியதில் அவரும் ''அந்த முகம் முன்பு எங்கோ பார்த்த முகம் போல் இருக்கிறது'' என்றார். குயிலியின் முகம்தான் என்றும் நேற்று அவளை முதன் முதலில் ஒப்பனை அறையில் பார்த்த போதே தமக்குச் சிறிது சந்தேகம் வந்ததாகவும் கூறினார். ரங்கமன்னார் அவர்களுக்குத் தக்க சன்மானம் செய்து அனுப்பியபின் சின்னம்மாளை மட்டும் தனியே அழைத்து அரசி, ''இந்தப் பெண் யார்?'' என்று கேட்டார். முதலில் சின்னம்மாள் தன் அக்காள் மகள் என்றே சாதித்தாள். பிறகு தங்கள் குலத்தில் பலர் பெண்களைக் குழந்தையாக இருக்கும் போதே வாங்கி வளர்ப்பது உண்டு என்றும், தாசிக்குப் பெண்தான் தனம் என்றும் கூறினாள். பிறகு மகாராணியார் சின்னம்மாளுக்கு உண்மையைச் சொன்னால் ஓர் ஊரையே மானியமாகத் தருவதாகக் கூறவே சின்னம்மாள் பின்வருமாறு கூறினாள்:

''இது எங்கம்மா சொல்லிக் கேட்ட கதைதான். சுமார் பதினாறு வருஷங்

களுக்கு முன்னுலே ஒரு நாள் நடு ராத்திரியில் எங்க வீட்டுக் கதவை யாரோ தட்டிருங்களாம். கதவு உடனே திறந்துக்கிட்டுதாம். உள்ளே ஒரு போர் வீரன் கையில் ஒரு மூட்டையுடன் பர பரப்பாக வந்தாராம். அவரைப் பார்த்தா உசிருக்குப் பயந்து ஓடி வந்தவர் போலத் தோணிச்சாம். ஆனுல் எங்கக்கா அவரை யார் என்ன என்று கூடக் கேட்காமல், 'வாங்க, உட்காருங்க' என்று ஊஞ்சலில் உட்காரச் சொல்லிச்சாம். அவர் ஆச்சரியப்பட்டு, 'நான் யார் என்று கூடக் கேட்கவில்லையே ? நான் திருடனுக இருந்தால் என்ன செய்வாய்?' என்ருராம். அதற்கு எங்க அக்கா, சிரித்துக் கொண்டே, 'நாங்கள் கணிகையர் குலம். எங்கள் வீட்டைத் தேடி அரசரும் வருவார். திருடனும் வருவார். யார் வந்தாலும் யார் என்ன என்று விவரம் கேட்காமல் இருப்பதுதான் எங்கள் 'குல தர்மம்' என்று சொல்லிவிட்டு, 'உட்காருங்க. இதோ பால் காய்ச்சிக் கொண்டு வருகிறேன்' என்று அடுப்பங்கரைக்குப் போச்சாம். அப்ப அந்த வீரர் அதைக் கூப்பிட்டு அதன் கையிலே பத்து வராகனைக் கொடுத்துவிட்டு, 'இந்தா, இதைப் பார்த்துக் கொள்' என்று அந்த மூட்டையைக் காட்டிவிட்டு, 'முதலில் நான் குளிக்க வேண்டும். கிணற்றடி எங்கே இருக்கிறது?' என்று கேட்டாராம். அக்கா கொல்லைப்புறத்துக்கு அழைத்துப் போய்க் கிணத்தைக் காட்டிருளாம். அவர், 'நான் ஸ்நானம் செய்து விட்டு வருகிறேன். நீ உள்ளே போ' என்று கொல்லைக் கதவைச் சாத்திக்கொண்டாராம். எங்கக்கா நாலு நாழி காத்திருந்திருக்குது. ஆளு போன ஆளு வரலே இல்லே. கொல்லைப்புறமிருந்து நாய்கள் குலைக்கிற சத்தம் வேறே கேட்கவே கொல்லையிலே போய்ப் பார்த்தா அவரைக் காணுமாம். கொல்லைச் சுவர் வழியாக ஏறிக் குதிச்சு ஓடிப்போயிருப்பாரோ என்ற சந்தேகத்தில் எங்கக்கா பயந்து உள்ளே வந்து அவர் குடுத்த மூட்டையிலே என்ன இருக்குமோ; உண்மையிலே அவர் திருடனுகவே இருந்து எங்கேயாவது திருடிய சாமானை நம்ம வீட்டிலே கொண்டாந்து வச்சுட்டா ஆபத்தாச்சே என்ற எண்ணத்திலே கூடத்திலே இருந்த மூட்டையைப் பிரிச்சுப் பார்த்தால் கோடி சூரியப் பிரகாசமாக் குழந்தை இருந்துதாம். குழந்தையைத் தூக்கிருங்களாம். கையிலே ஒரு காயம் ரத்தப் புண்ணு இருந்திச்சாம். அந்தப் புண்ணிலே கைபட்டுக் குழந்தை கத்திச்சாம். அப்புறம் அதுக்கு மருந்து போட்டு ஆத்தி நமக்குப் பொண் குழந்தை இல்லேங்கறதுக்காக ஆண்டவனே குழந்தையைக் கொண்டு வந்து குடுத்திருக்காரு என்று எங்கக்காவும் அம்மாவும் அதை வளர்த்தாங்க. குரலைக் கேட்டுப் பேர் வச்சாங்க, அது தான் குயிலி.

''இதோ பாருங்க!'' என்று தன் மடியில் இருந்து ஒரு சுருக்குப் பையை எடுத்தாள் சின்னம்மா. அதனுள் இருந்து ஒரு முத்து மாலையும் வைரப் பதக்கமும் ஒரு ஜோடி காதுக் குண்டலமும் கீழே விழுந்தன.

''இதுதான் அந்தக் குழந்தை போட்டுக்கிட்டிருந்த நகை. 'அடியே நீ ஊருக்குப் போறப்போ அதை வீட்டிலே வச்சுட்டுப் போகாதே. அந்த 'வெள்ளை' கதவைக்கூடக் கழட்டிக் கள்ளுக்கடையிலே அடகு வச்சுடுவான். அவன் கையில் இது கிடைத்தால் குழந்தை நகையையும் வித்துக் குடிச்சுடுவான்' என்று எங்கம்மா சொன்னுங்க. அது இப்ப நல்லதாப் போச்சு'' என்று சின்னம்மா அழுது கொண்டே சொன்னுள்.

மகாராணி மீனுட்சி தேவியார் அந்த முத்து மாலையையும் பதக்கத்தையும் எடுத்துப் பார்த்தாள். ''ஆ! மகளே நீதானு குயிலி!'' என்று அலறிஅழுதாள்.

''அக்கா, உனக்கா துரோகம் செய்தேன்!'' என்று அலறிஞள் ஆடுமயில்.

தரையில் கிடந்த குயிலி இப்போது மெத்தையில் கிடந்தாள். விலங்கிட்ட கைகளில் முத்தமிட்டாள் அரசி. அவளை ஒழித்துவிடு என்று உத்திர விட்ட தங்கை, ''அக்கா, அக்கா! என்னை மன்னிப்பாயா?'' என்று அடிக்கடி கேட்டாள். ''அக்கா நீயே அவரைக் கல்யாணம் செய்து கொள்'' என்று சொல்லிக் கண்ணீரில் தன் காதலையும் தத்தம் செய்தாள் ஆடுமயில். மாமன் சின்னப் பெருமாளோ இனி நமக்குப் போட்டியில்லே. குயிலி வந்ததால் இளவரசி நமக்குக் கிடைப்பாள் என்று இறுமாந்திருந்தார்.

அதிகாலையில் குயிலி ஒரு கனவு கண்டாள். அதில் அவளுடைய உருவமே எதிரில் வந்தது.

''அடியே, இம்பெரும் பாதகங்களுக்கும் அரண்மனைதான் பிறப்பிடம் என்ருயே. நீயும் அதில் ஒருத்தியாகிவிட்டாயா? அன்னபூரணு தேவிக்கு அளித்த சத்தியத்தை மறந்தாய். தங்கையின் கணவனை உன்னுடைய கணவனுக ஆக்கிக்கொள்ளப் பார்ச்

சென்னை, சார்ட்டர்டு அக்கௌண்டண்ட்ஸ் பி. எஸ். கோபாலகிருஷ்ணன் & கம்பெனியைச் சேர்ந்த ஸ்ரீ எம். எஸ். கிருஷ்ணமூர்த்தி அவர்களின் குமாரி சௌ. ஜயலக்ஷ்மிக்கும் சென்னை, சத்யமூர்த்தி உயர்நிலைப் பள்ளி தலைமை ஆசிரியர் ஸ்ரீ ஆர். ராமநாதன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி **ஆர். ராமமூர்த்தி** M. Sc., Grad. I. T. E., அவர்களுக்கும் சென்னையில் சமீபத்தில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

வாழ்க மணமக்கள் !

கல்லிடைக்குறிச்சி K.V. வெங்கட்டராமய்யரின் பௌத்திரியும் K. V. வெங்கடேஸ்வரன் அவர்களின் ஜேஷ்ட புத்திரியுமான சௌ. **சுப்புலக்ஷ்மிக்கும்** கோட்டபாடி M. சுவாமிநாதய்யர் பௌத்திரனும் லேட் S. கலியாணசுந்தரமய்யரின் ஜேஷ்ட குமாரனுமான சிரஞ்சீவி K. **ரகுவிற்கும்** சென்னையில் சமீபத்தில் வெகு விமரிசையாக விவாஹம் நடந்தேறியது.

வாழ்க மணமக்கள் !

கிறாய். ஏழைக் குயிலிக்கும் இளவரசி குயிலிக்கும் எத்தனை மாறுபாடு?'' என்று அவள் மனச்சாட்சி கேட்டது. எள்ளி நகையாடியது.

மறுநாள் காலை. மஞ்சம் காலியாக இருந்தது. மாயக் குயிலி மறைந்து விட்டாள். தாயும் மகனும் தேடினார்கள். ''இன்றுவரை ஏழையாகவே இருந்தேன். என்றும் அப்படியே இருந்து விடுகிறேன். என் தங்கைக்கும் இளவரசருக்கும் நடக்கும் திருமணத்தில் என் பரிசு'' என்று மாங்காய் மாலையின் மேல் ஓர் ஓலை நறுக்கு கட்டி இருந்தது.

''மகளே!'' என்று அலறினாள் மகாராணி. அப்போது, ''ஆர்க்காடு நவாபு படையுடன் வருகிறார். அவரோடு கூட அவரது அக்காள் புருஷன் சந்தா சாயபும் வருகிறார்.'' என்றார் ஒற்றர் தலைவன். ''மகளே'' என்று அலறிய வாய் ''மகுடத்தை எப்படியாவது காப்பாற்றுங்கள்'' என்று கூவியது.

சின்னத்தம்பி, சட்டாம்பிள்ளை, முந்திரிக்கொட்டை மூவரும் ஒரு பட்டமரத்தை வெண்ணாற்றின் மேல் தள்ளிக்கொண்டு சென்றார்கள். காலை வெயிலில் கந்தல் உடையுடன் குயிலி அதன் மேல் குப்புறக் கிடந்தாள்.

துக்கோஜி மன்னரும் அரண்மனையில் அப்படித்தான் படுத்திருந்தார்.

மந்திரம் போடப் போனவனை பேய் விழுங்கியது போல் இளவரசி சுஜனாபாய் கில்லேதார் என்னும் கிழட்டுப் பேயின் கைப்பாவையாகி விட்டாள்.

''நான் சொன்னபடி கேட்கிறாயா, இல்லாவிட்டால் கௌமாஜியைத் தப்ப விட்டது நீதான், நீயும் உன் கணவரும் காட்டு ராஜாவுக்கு உடந்தை'' என்று அரசரிடம் கூறி உங்கள் பட்டத்துக்கு உலை வைத்துவிடவா? என் மகனை நான் சந்தா சாயபுவின் மகளுக்குக் கல்யாணம் செய்து கொடுக்க வேண்டும். அதற்கு நீங்கள் இருவரும் பட்டத்துக்கு வந்து உதவி செய்ய வேண்டும். உடனே உன் மாமனாரிடம் போய் அவருக்குப் பிறகு உன் கணவனுக்கே பட்டம் தருவதாக உறுதி வாங்கிக்கொள். இல்லையேல் அவர் பிரதாப சிம்மனுக்குப் பட்டம் கட்டிவிடுவார். அவன் பிற நாகரிகங்களுக்கு விரோதி'' என்று அச்சுறுத்தினார் மதவெறி பிடித்த கில்லேதார்.

அரசரின் மரணப் படுக்கையில் மருமகள் போராடினாள். மருமகளின் துணிவைக் கண்டு அரசர் வருந்தினார். கில்லேதாரின் சூழ்ச்சி யெல்லாம் அவருக்குப் புரிந்து விட்டது. ஆயினும் தம் மகன் பாவாஜியை அழைத்து அவர் உயிரோடிருக்கும்வரை அயலானுக்கு அடிமையாவதில்லை என்ற உறுதியை அவரிடம் வாங்கிக் கொண்டு ''பட்டம் உனக்கே'' என்று சையதின் முன்னிலையில் கையில் அடித்துக் கொடுத்தார் அரசர்.

''பிரதாப சிம்மா, பிரதாபசிம்மா! திருக்காட்டுப்பள்ளியை உனக்காகவே வாங்கினேன். உன் அண்ணன் பாவாஜி உடல் நலம் இல்லாதவன். நீயும் அவனும் சேர்ந்து அரசு புரிந்தால் நாடு நிலைக்கும் என்று நினைத்தேன்... நினைத்தேன்...'' என்று சொல்லிக்கொண்டே தன் நினைவை இழந்தார் அருங்கலைகளை ஆயுள்வரை காத்த அரசர் துக்கோஜி.

1736ம் ஆண்டு நள வருஷத்தில், தஞ்சை அரண்மனையே துக்கத்தில் ஆழ்ந்தது. பட்டத்து யானை உணவருந்தாமல் உயிரை விட்டது. பண்டித முனிவர் துறவியானார். கில்லேதார் சையது கோட்டை முழுவதும் எங்கும் இருந்தார். மன்னர் துக்கோஜியுடன் பட்டமகிஷிகள் மூவரும், அன்னபூர்ணா தேவியும் உடன்கட்டை ஏறி ''ஸதி'' செய்யத் தயாரானார்கள். பிரதாப சிம்மரோ பித்துப் பிடித்தவர் போல் இருந்தார். உணவு உறக்கம் ஒன்றும் தேவையில்லை என்றார். குயிலி தன்னை வெறுங் கூடாக ஆக்கி விட்டாள் என்ற வருத்தத்தில் ''ஐயோ, மரணத்தில் என் தந்தையை நான் முந்தியிருக்கக் கூடாதா?'' என்று தவித்தார்.

மகனை அழைத்தார் அன்னபூர்ணா தேவி. மஞ்சள் புடவையும், மல்லிகை மாலையும், வாய் நிரம்ப வெற்றிலையும் மடியில் தேங்காயுமாக மைந்தனின் எதிரில் நின்றாள் அம்மாதா.

''மகனே, உண்மையை உரைக்காமல் உடன்கட்டை ஏற எனக்கு மனமில்லை. குயிலி குணம் கெட்டவள் அல்ல. அவள் ஓர் உத்தமப் பத்தினி. என்னைக் காட்டிலும் பத்துப் பங்கு மேலானவள். உன்னை விட்டுக் கொடுத்துவிடுவதாக அவள் இரகசியமாக எனக்கு உறுதி அளித்தாள். அதற்காகவே அவள், நீயே அவளை வெறுக்கும் வண்ணம் பெண் குலத்தால் தாங்கவே முடியாத பெரும் பழி ஒன்றைத் தானே சுமந்து கொண்டிருக்கிறாள். மகனே, அவளுடைய ஆசைக் கணவனை அவளிடமிருந்து பிரித்த பாவம், என் கணவரை நான் இழந்தேன். குயிலியைத் தேடிப் பார். அவளைக் கண்டு அவளுக்கு ஆறுதல் கூறு. குப்பியின் மகனாகிய காட்டு ராசாவை நீ உன் கையால் கொல்ல மாட்டாய் என்று நான் குப்பிக்கு

அபயம் அளித்திருக்கிறேன். நீ அவனைக் கொல்லாதே. உனக்கு மன்னர் பதவி இல்லாவிட்டாலும் மக்கள் கடமை உண்டு. இந்நாட்டில் அயலான் அடியெடுத்து வைக்க விடாதே. என் அஸ்தியை எடுத்துக் காவிரியில் கரைக்கும்போது அம்மா என் உடல் பொருள் ஆவி மூன்றுனும் காவிரியைக் காப்பேன் என்று கூறு'' என்று கண்ணீரும் கம்பலையுமாய்க் கூறிய பின்னர் அன்னபூர்ணா தேவியார் ஆனந்தமாகத் தன் கணவனுடன் அனலில் குதித்தார்.

## முடிவுரை

துயரத்தின்மேல் துயரம் தாங்காமல் பிரதாப சிம்மர் துறவிபோலானார். குயிலியைத் தேடித் தேடி அலைந்தார்.

இதற்குள் பாவாஜி பட்டத்துக்கு வந்த மூன்றும் மாதத்திலேயே சந்தா சாகிப் தஞ்சையைத் தாக்கினார். அந்த ஆபத்துச் சமயத்தில் சையதின் படை தாமதம் செய்யவே, உடல் நலமில்லாத பாவாஜியே கோட்டையின் மீது பீரங்கியை ஏற்றி தம் கைகளாலேயே குண்டுமாரி பொழிந்தார். அண்ணனின் கீழ் ஒரு சாதாரணச் சிப்பாயைப் போல் பிரதாப சிம்மர் வீரப்போர் செய்தார். அவருக்கு உயிர் மேல் ஆசை இல்லாததால் ஏராளமான எதிரிகளைக் கொன்றார். சந்தா சாகிப் தஞ்சையில் முறியடிக்கப்பட்டார். திருச்சியை நோக்கிச் சென்றார்.

ராணி மீனாட்சியைக் காப்பதாகச் சொல்லிப் பொய்ச் சத்தியம் செய்து கொடுத்துவிட்டு அவளைச் சிறைவைத்தார் சந்தா சாகிப். அதுமட்டுமல்லாமல் ராணிமீது கெட்ட நோக்கமும் கொண்டார். இதை அறிந்த மீனாட்சியும் ஆடுமயிலும் எதையோ அருந்தி அன்னையும் மகளும் மானத்துடன் அரங்கன் திருவடி சேர்ந்தார்கள்.

போர் வெற்றியாக முடிந்தாலும் அந்தக் களைப்பில் பாவா சாகிப் தந்தைக்கு அளித்த வாக்கைக் காப்பாற்றி விட்டு இறந்தார். அவரோடு அனலில் குதிப்பதைக் காட்டிலும் அரியணையில் ஏறுவதுதான் சரி என்ற எண்ணத்தில் சுஜனுபாய் தன் தலையில் தஞ்சைக் கிரீடத்தைச் சூட்டிக் கொண்டாள்.

பிங்கள வருஷத்தின் பின் பகுதியில் பெண் அரசு தஞ்சையிலும் ஏற்பட்டது.

திருச்சிராப்பள்ளி விழுந்ததைக்கண்ட பண்டித முனிவரும், சர்க்கரையும் பிரதாப சிம்மரைத் தஞ்சை அரச காரியத்தில் அக்கறை கொள்ளும்படி அடிக்கடி வற்புறுத்தி வந்தார்கள். இந்நிலையில் காட்டு ராஜா சிதம்பரத்தில் இருப்பதாகவும், தேவனும்பட்டினத்தில் உள்ள கிழக்கிந்தியக் கம்பெனி வெள்ளைக்காரர்களின் உதவியை அவருக்காக கௌமாஜி நாடுவதாகவும் அவர்களும் நாடு பிடிக்கும் ஆசையில் காட்டு ராஜாவின் உரிமைக் கதையை நம்புவதாகவும், வெள்ளையர் நாகரிகம் அங்கு வரப் போவதாகவும் கூறினார்கள். அன்பர்கள் தொந்தரவு தாங்காமல் தஞ்சையை விட்டுப் பிரதாப சிம்மர் மகாதேவ பட்டினம் சென்றுவிட்டார்.

அதிகாலை மகாதேவ பட்டினத்தில் உள்ள சம்போ மகாதேவர் கோயிலைச் சுற்றி வந்தார் இளவரசர். அப்போது அவர் காதில் 'ராம ராம ஜய ராஜா ராம் ராம ராம ஜய சீதாராம்' என்று தேனினும் இனிய குரலில் ஒரு கீதம் கேட்டது. அத்திசையை நோக்கி ஓடினார் இளவரசர்.

அங்கு வட நாட்டுக் கோஸாயிகள் போல வேடமிட்ட நால்வர் ஒரு அடுப்பைச் சுற்றி ரொட்டி சுட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் நடுவே ஒரு பெண் பாடிக் கொண்டிருந்தாள்.

அவளது பரட்டைத் தலையும் அழுக்கடைந்த மேனியும் ஒடிந்து விழுவது போல் இருந்த உடலினையும் கண்ட இளவரசர் ஓடி அவளருகில் சென்று ''குயிலி!'' என்று கதறினார். துவண்டார். அவள் ஓடிவந்தாள். அவரைத் தூக்கினாள்.

''இளவரசே! நானும் அரசைத் துறந்தவள்தான். ஆனால் உங்களை அரசைத் துறக்காதீர்கள் என்று கேட்டுக் கொள்கிறேன். நான் பெண்; எப்படியும் இருக்கலாம். நீங்கள் கடமையை விடலாமா? நான் கலைகளைக் காக்கும் கடமைக்காகக் காதலைத் துறந்தேன். நீங்கள் காதலுக்காகக் கடமையைத் துறந்தால் உலகம் உங்களைப் பார்த்து நகைக்காதா?'' என்றாள்.

''குயிலி! நீ இல்லாத உலகம் எனக்கு சூனியமாகி விட்டது'' என்றார் இளவரசர்.

''நான் இறந்திருந்தால்?''

''நானும் இறந்திருப்பேன்!''

''அரசே! ஒரு பெண்ணால் ஒரு வீடு விளங்குவது போல் ஒரு ஆணால் ஒரு நாடும் விளங்க வேண்டும். என் தியாகத்தை நீங்கள் மதிப்பதாக இருந்தால் நீங்கள் காட்டு ராஜாவையும் அவருக்கு உடந்தையாக இருக்கும் கில்லேதாரையும் அடக்க வேண்டும். ஆங்கிலேயனும் பரங்கியும் காவிரி நாட்டில் காலடி வைத்து நம் கலைகள் அழியாமல் காக்க வேண்டும்''

''ஆகட்டும் குயிலி. நான் அப்படியே செய்கிறேன். நீ என்னோடு வந்துவிடு'' என்று நாத் தழுதழுக்கக் கேட்டார் இளவரசர்.

''அரசே! அப்படியானால் நான் இப்போது உங்களோடு இல்லையா? என்னை நீங்கள் மறந்தால்தானே நான் இல்லாமல் போவேன்? காவிரிக் கரை மரங்களில் குயில் கூவும்போதெல்லாம் குயிலி அழைக்கிறாள் என்று அறிந்து கொள்ளுங்கள். உங்கள் கடமைகளைச் செய்வதுதான் என் காதலுக்குப் பரிசு. உங்கள் குலம் விளங்குவதுதான் உங்கள் குடி மக்களுக்குப் பரிசு'' என்று மூச்சுத் திணறக் கூறினாள் குயிலி.

இளவரசர் மௌனமாக நின்றார்.

''சிங்கா!'' என்றாள் குயிலி. அவர் திரும்பினார். ''வாழ்க்கையே பல வேடங்கள் நிரம்பியதுதான்! சிங்கனாக இருந்து கடமையைச் செய்தீர்கள். பிரதாப சிம்மராக இருக்கும்போது அதைச் செய்ய வேண்டாமா? என் காதல் உங்களுக்குத்தான். நீங்கள் வென்று கடமையைச் செய்து அரசராகிய பின் தாராசுரம் கோயிலில் அன்னபூரணியின் முன் எனக்கு ஒரு சிலை செய்து அதன் கையில் ஒரு விளக்கைக் கொடுங்கள். அது அணையாமல் நந்தா விளக்காக நம் காதலைப் போல் என்றும் இருக்கும்படி நிவந்தம் அளியுங்கள். நான் அந்த விளக்கின் ஒளியில் நின்று அங்குள்ள கலைகளையும் கடவுளையும் மக்களுக்கு என்றும் காட்டிக் கொண்டே இருக்கிறேன். என் காதலுக்கு இதை நீங்கள் செய்யக் கூடாதா?'' என்றாள் குயிலி. அவள் பேச்சு அடிக்கடி தடைப்பட்டது. பேச்சும் மூச்சும் போட்டியிட்டன.

''ஐயோ, உயிருடன் இருக்கும் உனக்குச் சிலை செய்வதா? கற்பு விளக்கைக் கனக விளக்காக்கவா சொல்கிறாய்?'' என்று புலம்பினார் பிரதாப சிம்மர். அவளையே கூர்ந்து நோக்கினார்.

பிரிவுத் தீ அவளை உருக்குவதை அறிந்தார். அவசரமாக அவளது இடக் கரத்தைப் பற்றினார்.

''கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழி நான்'' என்று ஆண்டாள் பாசுரத்தை ஆதிவராகப் பெருமாள் சந்நிதியில் யாரோ பாடினார்கள். ஆம். குயிலியும் கண் மூடிக் கனவு கண்டு கொண்டிருந்தாள். அப்போது எதிரில் இருந்த இலவ மரத்தின் மேல் இருந்து ஓர் குயில் பஞ்சம ஸ்வரத்தில் கூவியது.

இளவரசர் உயரப் பார்த்தார். குயில். குனிந்தார். அவர் கரத்தை விட்டுக் குயிலியின் உடல் சரிந்து கொண்டிருந்தது.

''குயிலீ! என்னை இலவு காத்த கிளியாக்கி விட்டாயே'' என்று அலறினார் பிரதாப சிம்மர்.

ஃ ஃ ஃ

**கா**ட்டு ராஜா என்பவன் சுஜானு பாயைக் கொன்று விட்டுப் பட்டத்துக்கு வந்தான். அவன் அரியணையில் கால் வைத்து ஏறுவதற்கு முன் அவனை வீழ்த்தி விரட்டினார் பிரதாப சிம்மர். அப்போதும் தாயின் வாக்கைக் காக்க அவனைக் கொல்லாது விட்டார்.

அயல் நாட்டு நாகரிகம் நம் நாட்டுக்குள் புகுந்துவிடாமல் வெள்ளைக்காரர்களுக்குச் சுங்க வரி போட்டார் அவர்.

காஞ்சியில் இருந்து பல போர்களினால் அவதியுற்ற காமகோடி பீடத்தைக் குடந்தைக்கு அழைத்து அங்கு திருமடமும் ஸ்தாபித்தார். நாகூரில் மசூதித் திருப்பணி செய்தார். கடைசிவரை நம் கலைகளைக் காப்பாற்றினார். தாராசுரம் கோயிலில் ஒரு நாள் தம் கையாலேயே குயிலியின் தங்கச் சிலையின் கரத்தில் திருவிளக்கேற்றினார். அப்போது எதிரில் இருந்த கோபுரத்திலிருந்து ஒரு குயில் கூவியது. பிரதாப சிம்ம மகாராஜா தம்மை மறந்தார்.

## பின்னுரை

''அரசர்கள் வருவார்கள் போவார்கள் ஆனால் அறம் தான் நிலைத்து நிற்கும்'' என்பதைக் காட்டத் தான் பிரதாப சிம்ம மகாராஜா இந்தச் சத்திரத்தை கட்டியிருப்பாரோ'' என்று நினைத்துக் கொண்டே தஞ்சை ராஜா சத்திரத்தில் ஓர் அறையில் படுத்திருந்தேன். அப்போது ஓர் குயில் கூவவே எனக்குச் சிறு வயதில் பிலஹரி ராவ் சொல்லிய குயிலியின் கதை நினைவுக்கு வந்தது. கடமைக்காக காதலைத் துறந்த குயிலி; அதையும் தாங்கிக் கொண்டு கடமைக்காக நாட்டைக் காத்த பிரதாப சிம்மர் இவர்களைக் குறித்துப் பெருமிதம் வரவே, அந்த வரலாற்றை எழுத வேண்டுமென்ற ஆசை பிறந்தது. இக்கதையை எழுதுவது என நிச்சயம் செய்தேன். நிச்சயம் செய்தால் மட்டும் போதுமா? எனக்குச் சரித்திர ஏடுகளைத் தந்த சரஸ்வதி மகாலையும், படிக்க நூல்களைத் தந்த நம் நாட்டு ஆராய்ச்சியாளர்களையும் தஞ்சை அரச பரம்பரையாளரையும் நினைக்க வேண்டும். வாசக நேயர்களுக்கு வணக்கம். என்னை ''மகாராஜனாக இருங்கள்'' என்று வாழ்த்திய அமரர் கல்கி அவர்களுக்கும் வணக்கம்.





## புரடோ!

உலகத்தில் மிகப் பெரிய வடை தயாரிக்கப்படும் இடம் எது தெரியுமா?

தஞ்சையில் உள்ள மானம்புச்சாவடிப் பகுதியில்தான்! இங்குள்ள சௌராஷ்டிர வகுப்பினர் நடத்தும் திருமணத்தில் மாப்பிள்ளை வீட்டாருக்கும் பெரிய வடை சுட்டுக் கொடுப்பது வழக்கம். இந்த வடையைக் கூறுகளாக்க அரிவாள்மனையைப் பயன்படுத்துகிறார்கள். ஒன்றரை அடி வட்டத்தில் இரண்டு அங்குலம் கனம் கொண்டதாக இருக்கும். ஒரு வடை தயாரிக்க மூன்றே முக்கால் லிட்டர் உளுத்தம் மாவு வேண்டும். கையினால் தட்டி எண்ணெய்ச் சட்டியில் போட முடியாது. பெரிய வட்டத் தாம்பாளத்தின் பின்புறத்தில் மாவைக் கொட்டித் தட்டிக் கொஞ்சம் சாய்த்து எண்ணெய்ச் சட்டியில் நழுவ விடுவார்கள்.

இதே மாதிரி பெரிய அளவில் முந்திரிப் பருப்பு கலந்து இனிப்பு வடையும் தயாரிக்கிறார்கள். அதிரசமும் கூடத் தயாரிக்கிறார்கள். தஞ்சை வாழ் சௌராஷ்டிரர்களுக்கே உரித்தான இந்தச் சீர் வரிசைக்கு சௌராஷ்டிர மொழியில் 'புரடோ' என்று பெயர்.

தகவல் : கே. எஸ். லட்சுமணன்



ஒருவன் நிறைய நாட்கள் உயிர்வாழ, க்யூவில் நின்று வைட்டமின் மாத்திரை வாங்கினான். பிறகு ரொம்பவும் லேட்டாகி விட்டதே என்று எழுபது மைல் வேகத்தில் காரை ஓட்டிச் சென்றான்.

விபத்து - மரணம்.

''காரனெட்''-'பாபு'

## மாயமில்லை, மந்திரமில்லை!

நியூஸிலாந்தில் லாங் என்பவர் 3,600 முட்டைகள் ஏற்றப்பட்ட லாரியை ஓட்டிச் சென்று கொண்டிருந்தார். வழியில் லாரி ஒரு காருடன்



மோதி, கார் உருத் தெரியாமல் நசுங்கி விட்டது. ஆனால் என்ன ஆச்சரியம்! லாரியிலிருந்த முட்டைகளில் ஒன்றுகூட உடையவில்லை!

ஆதாரம். 'டிட்பிட்ஸ்'
தகவல்: ச. ஸ்ரீதரன்

## விசித்திர வருமானம்!

திரைப் படங்களில் சில காட்சிகளில் நடிகைகள் 'இீச்'சென்று கத்த வேண்டிய சந்தர்ப்பங்கள் வருகிறதல்லவா? இதனால் தங்கள் குரல் கெட்டுவிடுமென்று சில நடிகைகள் பயப்படுவதால் அவர்களுக்குப் பதிலாகக் கத்தி தினமும் ஆயிரம் ரூபாய்க்கு மேல் ஹாலிவுட்டில் வருமானம் பெறுபவர்கள் இருக்கிறார்கள்.

ஆதாரம்: 'டெக்கான் ஹெரால்டு'
தகவல்: வி. ந. ஸ்ரீதரன்.

ரேடியம் டயலைக்கூட உற்றுப் பார்க்க வேண்டிய சிரமம் இன்றி இரவு பகல் எந்நேரமும் எளிதில் பார்த்ததும் மணி தெரிந்து கொள்ளக்கூடிய கடிகாரம் ஒன்றை ஸ்விட்ஸர்லாந்தில் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

கால் அங்குல நீளமும், பென்சிலில் உள்ள எழுதும்



முனை அளவு பெரிதுமான பல்பு ஒன்று கடிகாரத்தில் பொருத்தப்பட்டுள்ளது. கடிகாரத்தின் விளிம்பில் உள்ள ஸ்விட்சை அழுத்தினால் போதும். உடனே லைட் எரிந்து நேரத்தைப் பிரகாசமாகக் காட்டும்.

ஆதாரம்: 'நியூஸ் வீக்'
தகவல்: வி. ந. ஸ்ரீதரன்'

பிரான்சில் சமீபத்தில் நடந்த ஏலம் ஒன்றில் மிகப் பழைய கடிகாரம் ஒன்றை 360 ரூபாய்க்கு ஏலம் எடுத்தவர் வீட்டுக்கு வந்து பார்த்தபோது அக்கடிகாரத்தில் 45000 ரூபாய் பெறுமான நகைகள் இருந்தனவாம்!

ஆதாரம்: 'டெக்கான் ஹெரால்ட்'
தகவல்: வி. ந. ஸ்ரீதரன்





காண்டா மிருகத்துக்குக் கண் எப்போதுமே சரியாகத் தெரியாதாம். அதனால்தான் அது எப்போதும் முரட்டுத்தனமாக நடந்து கொள்ளுகிறதாம்.

''பேஜண்ட்'' - 'பாபு'






## இனிக்கும் நினைவுகள்



'இனிக்கும் நினைவு'களை வாசகர்களுக்கு அள்ளித் தெளித்து விட்டு ஆசிரியர் துன்ப நினைவுகளை இதயத்தில் தேக்கச் செய்து விட்டாரே.

எஸ்.ஆர்.கே. வித்யாலயா
17-10-68 எஸ்.பி. மைதிலி

சீலியா பாத்திரத்தின் மூலம் திருமதி கோமகள் அவர்கள், தியாக உணர்ச்சிக்குச் சொல்லுருவம் கொடுத்து, படிப்பவர்களின் உள்ளத்திலே என்றைக்கும் நீங்காத எண்ணக் குவியலாய் 'இனிக்கும் நினைவுகளை' அமைத்திருக்கிறார்.

சென்னை—38
17-10-68 சா. நாராயணன்

எல்லாமே நெஞ்சில் நிலைபெற்றுவிட்ட நினைவுகளாகி விட்டன. 'இனிக்கும் நினைவு'களின் ஆசிரியருக்கு என் அன்புப் பாராட்டுக்கள்.

திருச்சி—14
17-10-68 இரா. கணபதி

அன்னம் பாலைப் பிரிப்பது போல் அவனுக்குச் சுகத்தைப் பிரித்துவிட்டுத் தான் துயரை ஏந்திச் செல்லும் நங்கையின் நினைவு என்றுமே இனிக்கும். கதை முழுவதும் உணர்ச்சிக் கொந்தளிப்புக்களையும் உள்ளப் பரிமாறல்களையும் நயம்படச் சித்திரித்திருக்கும் முறை மிகவும் பாராட்டுக்குரியது.

பம்பாய்—19
17-10-68 பகவதி செல்வன்

முதல் நாவலே இவ்வளவு சிறப்பாக அமைந்தது ஆசிரியையின் திறமையைக் காட்டுகிறது. பாராட்டுதல்கள்.

பெங்களூர்—5
18-10-68 த. கணேசன்

வாழ்வுக்கு வசந்தத்தைக் காட்டியவள்
வசந்தத்தை இழந்தே வாடுகின்றாள்
தாழ்வுக்குத் தன்னையே இடமாக்கிக்
கசந்திட்ட பயணத்தை மேற்கொண்டாள்
ஆழ்கடலில் கிடைத்திட்ட வலம்புரியோ?
சீலியாஎன் றோர்தூய திருமகளோ?
தாழ்வின்றித் தாங்காத கோமகளை
சலிப்பின்றி வாழ்த்துவேன் வாழ்கென்று!

உதகமண்டலம், இளவேந்தன் கோபாலன்
18-10-68

வியாசருடைய உள்ளத்தை அப்படியே வெளியில் எடுத்துக் காட்டுவது என்பது ஸ்ரீ ராஜாஜி அவர்களைத் தவிர வேறு யாராலும் முடியாது. நல்ல மனமுடையவர்கள் கல்கி பத்திரிகையில் மகாபாரதம் படித்தார்களேயானால் ஸ்ரீ வியாஸரே ஸ்ரீ ராஜாஜி என்றுதான் கூறுவார்கள்.

பெரியோர்களுக்குத் தர்மசங்கடங்கள் ஏற்பட்டது பற்றி ஸ்ரீ ராஜாஜி எழுதியதை யாவரும் படித்து இம்மாதிரி சந்தர்ப்பத்தில் எப்படி நடக்க வேண்டும் என்பதை உணர வேண்டும்.

இம்மாதிரி தர்மசங்கடங்களில் ஸ்ரீராஜாஜி தான் மனத்திற்கோ ஆசைக்கோ வசப்படாமல் நடப்பார்கள் என்பது உலகம் அறியும்.

ஸ்ரீ ராஜாஜி அவர்கள் ஜோதிஷ சாஸ்திரத்தில் கூறியபடி நூற்று இருபது வயது இருக்க வேண்டும். ஸ்ரீ குருவாயூரப்பன் அப்படி அருள் புரிய வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

சேலம் — 7
20-10-68 ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்

"தர்மம்தான் வெல்லும்; ஆசை வெல்லாது" என்ற தத்துவத்தை வாசவன் 'மறுபடியும் வெல்லும்' என்ற கதை மூலம் வெளிப்படுத்தி யிருக்கும் லாகவமே மெய் சிலிர்க்க வைக்கிறது.

புதிதாக வாங்கிய 'செல்'களைப் போட்ட டார்ச் லைட்டின் ஒளி கண்ணைப் பறிப்பது போல வாரா வாரம் புதிய கருத்தினைக் கொண்ட சிறப்புச் சிறுகதையை வெளியிடும் "கல்கி", வாசகர்களின் மனத்தைப் பறிக்கிறது !

திருச்சி — 1
4-10-68 வி. எஸ். சுதர்சனம்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4302
Registered as a Newspaper in Ceylon

# நொடிப் பொழுதில் பளிச்சிடும் தூய்மைக்கே...




# நுரைவளமோங்கும் விம்

கடுமை வாய்ந்த, மலிவான தேய்ப்புச் சாதனங்களை நம்பியிருக்க முடியுமா? கண்டிப்புடன் பெற்றிடுவீர் நுரைவளமோங்கும் விம். பேசின், தொட்டி, பீங்கான் பாண்டங்கள், பாத்திரங்கள், எதுவாயினும் சரி—விம் பட்ட இடமெல்லாம் ஒளிப் பிழம்பே. துப்புரவாக்குவதில் அதிக ஆற்றல் வாய்ந்த விம், விடாப்பிடியான பிசுக்குக்கும் விடைகொடுக்கும். துப்புரவான இல்லங்களுக்கு அடையாளம் ஒப்பிலாத விம் ஒளி.
ஓங்கிய ஒளிபெறவே—வாங்குவீர் விம்.

**பாங்கான இல்லங்களிலே விம், பளிச்சிடும் இல்லங்களிலே விம்**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-V.19-140 T